க.பொ.த. உயர்தர
வகுப்புக்குரியது

# தேர்ந்த தமிழ்ச் சிறுகதைகள்

• புதுமைப்பித்தன் • கு.ப.ராஜகோபாலன்
• இலங்கையர்கோன் • கு.அழகிரிசாமி
• சி.வைத்தியலிங்கம்

ஸ்ரீ சுப்பிரமணிய
புத்தகசாலை
யாழ்ப்பாணம்

# தேர்ந்த தமிழ்ச் சிறுகதைகள்

க. பொ. த. உயர்தர வகுப்புக்குரியது.


இ. புதுமைப்பித்தன்

இ. கு. ப. ராஜகோபாலன்

இ. கு. அழகிரிசாமி

இ. இலங்கையர்கோன்

இ. சி. வைத்திலிங்கம்



விற்பனையாளர்:

ஸ்ரீ சுப்பிரமணிய புத்தகசாலை

235, காங்கேசன்துறை வீதி,

யாழ்ப்பாணம்.

# நூல் விபரம்


| | |
|---|---|
| நூல் | : தேர்ந்த தமிழ்ச் சிறுகதைகள் |
| அளவு | : கிறவுண் 1/8 |
| பக்கம் | : 59 |
| பயன்படுத்திய தாள் | : நியூஸ்பிரின்ட் |
| இரண்டாம் பதிப்பு | : தை, 2002 |
| அச்செழுத்து | : 10 புள்ளிகள் |
| வெளியீடு | : ஸ்ரீ சுப்பிரமணிய புத்தகசாலை<br>235, காங்கேசன்துறை வீதி,<br>யாழ்ப்பாணம். |
| அச்சுப்பதிப்பு | : ஸ்ரீ சுப்பிரமணிய அச்சகம்,<br>63, B. A. தம்பி ஒழுங்கை,<br>யாழ்ப்பாணம். |
| விலை | : ரூபா 50/- |

# தமிழ்ச் சிறுகதைகள்

## தமிழ்ச் சிறுகதைகள் – தொடக்கம்

நவீன இலக்கிய வகைகளில் சிறுகதை ஒன்றாகும். இன்று பலராலும் விரும்பிப்படிக்கப்படும் ஓர் இலக்கிய வகையாகச் சிறுகதை மாறிவிட்டது. தமிழில் சிறுகதைகள் சுமார் எண்பதாண்டுகளுக்கு மேலாக எழுதப்பட்டு வருகின்றன.

தமிழ்ச் சிறுகதையின் தந்தையாகக் கருதப்படுபவர் வ. வே. சு. ஐயர் ஆவார். அவர் காலத்திற்கு முன்னரும் சிறிய அளவிலான கதைகள் எழுதப்பட்டு வந்தன. வீரமாமுனிவர் எழுதிய பரமார்த்த குரு கதை உரைநடையில் படைப்பிலக்கியம் தோன்ற அடித்தளமிட்டது. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வீராசாமிச் செட்டியார் எழுதிய வினோதரச மஞ்சரியும், தாண்டவராய முதலியார் மொழி பெயர்த்து எழுதிய பஞ்சதந்திரமும் வசன இலக்கியத்துக்குத் தூண்டுகோலாக அமைந்தன. இவ்விருவரையும் போலவே மகாகவி சுப்பிரமணிய பாரதியாரும், அ. மாதவையாவும் சிறுகதைத் துறையில் ஆர்வம் காட்டினர்.

தமிழ்ச் சிறுகதையின் தந்தையாக வ. வே. சு. ஐயர் கருதப்படுகின்ற போதிலும், வருடக் கணக்கை வைத்துப் பார்த்தாலும் சரி, இலக்கியக் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு அளவிட்டாலும் சரி தமிழின் நவீன சிறுகதை சுப்பிரமணிய பாரதியாரிடமிருந்தே தொடங்கு

கிறது என இன்று கருதப்படுகிறது. 1905-இல் அவர் சக்கரவர்த்தினியில் எழுதிய 'துளஸிபாய்' என்ற கதை, தமிழின் முதல் நவீனச் சிறுகதை என்று நம்ப இடமிருக்கிறது. எனினும், பாரதியாருடைய சிறுகதைகளில் உருவ அமைதியில்லை. வடிவம் பற்றிய பிரக்ஞை இல்லை. அவருடைய கதைகள் சம்பவங்களை உள்ளவாறே குறிப்பனவாக இருக்கின்றதேயன்றி உணர்வு நிலையைக் காட்டுவனவாக இல்லை. கதை சொல்லும் இந்திய மரபின் தொடர்ச்சியாகவே பாரதி தன்னுடைய சிறுகதையின் வடிவத்தைப் பெரும்பாலும் அமைத்துக்கொண்டார். அந்த வடிவத்தைத் தான் வாழ்ந்த காலத்தில் அரசியல், சமூக விமர்சனங்களுக்காகப் பயன்படுத்திக்கொண்டார். சிறுகதைகளைப் பத்திரிகை போலச் சமூக விமர்சனத்திற்கான ஓர் ஊடகமாகவே பயன்படுத்தினார்.

வ. வே. சு. ஐயரைத் தமிழ்ச் சிறுகதையின் முதல்வராகவும், அவரது சிறுகதையான 'குளத்தங்கரை அரசமரத்'தை நவீன சிறுகதையின் ஆரம்பமாகவும்கொண்டு தமிழ்ச்சிறுகதையின் சரித்திரத்தைத் தொடங்குவதும் ஒரு மரபாகிவிட்டது. பன்மொழிகளைக் கற்ற வ. வே. சு. ஐயர் பாண்டிச்சேரியில் அரவிந்தரோடும், பாரதியோடும் இருந்த காலத்தில் அதாவது 1915 - உக்கும் 1917-உக்கும் இடைப்பட்ட காலத்தில் தமிழில் சிறுகதைகள் எழுதினார். சொந்தமான கற்பனைக் கதைகளோடு ஏற்கனவே வழக்கில் இருந்துவந்த கதைகளையும் அவர் தன் நோக்கில் எழுதிப் பார்த்தார். அவையே 'மங்கையர்க்கரசியின் காதல்' என்ற தொகுப்பாக 1925-இல் வெளிவந்தன. இவற்றில் அவர் எழுதிய எட்டுச் சிறுகதைகள் அடங்கி இருந்தன. அதில் ஒன்றுதான் 'குளத்தங்கரை அரசமரம்' ஆகும்.

மனிதர்களைப் பற்றிய ஒரு கதையை மரத்தை வைத்துக்கொண்டு அது பார்த்தது, கேட்டது என்பதோடு அதன் அபிப்பிராயம் என்பதையும் சொல்வது மாதிரி

கதையைக் கொண்டு போகிறார். அந்தக் காலத்தில் ஓர் எரியும் பிரச்சினையாகக் கருதப்பட்ட பால்ய விவாகம் பற்றிப் பேசுவது எடுத்துக்கொண்ட பொருளாலும், கையாளப்பட்ட உத்தியாலும், சொல்லும் முறையாலும் இக்கதை அக்காலத்தில் புதுமை மிக்கதாகக் கருதப்பட்டது. தமிழில் தோன்றிய நவீன பண்புகள் கொண்ட முதல் சிறுகதை இதுவே எனலாம்.

வ. வே. சு. ஐயருக்குப் பின் ஏறத்தாழ பத்தாண்டு காலம் வரை தமிழ்ச் சிறுகதைத் துறையில் பெரிய மாற்றம் எதுவும் நிகழ்ந்துவிடவில்லை, அதற்கான காரணமும் உண்டு. காந்தீய இயக்கம் எழுச்சி பெற்று நாட்டின் அனைத்துச் சக்திகளும் விடுதலை ஒன்றே குறிக்கோளாய் இயங்கி வந்தமையால் இலக்கியப் படைப்புகளில் யாரும் கவனம் செலுத்தவில்லை. 1932 அளவில் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி 'ஆனந்தவிகடன்' மூலமும், டி எஸ். சொக்கலிங்கம் 'காந்தி' மூலமும், வ. ரா. 'மணிக்கொடி' மூலமும் புதிய படைப்புகளுக்கு ஊக்கம்தர முன்வந்தனர்.

கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி ஆனந்த விகடன் வாயிலாகப் பல சிறுகதைகளை வெளியிட்டார். 'கேதாரியின் தாயார்' என்னும் அவரது சிறுகதை அக்காலத்தில் பலராலும் போற்றப்பட்டது. பிராமண சமூகத்து விதவை ஒருத்திக்குச் செய்யப்படும் அலங்கோலமே கதையின் கருப்பொருள். கல்கியின் கதைகள் அறிவால் நீண்டும், கதைக்குள் கதையாகவும், எந்த ஒன்றையும் பலபட விவாதித்துக் கூறுவது போலவும் அமைந்திருக்கும். இலேசான பரிகாசத்தொனி அவரது கதைகளில் இடம்பெற்றிருக்கும். கல்கியின் கதைகள் அவற்றின் ஜனரஞ்சகப் பண்பிற்காகவே போற்றப்பட்டன. சிறுகதையை ஒரு பொழுது போக்குச் சாதனமாகவே கல்கி கருதினார்.

## புதுமைப்பித்தன்

தமிழ்ச் சிறுகதை இலக்கிய வரலாற்றில் புதுமைப் பித்தன் 'சிறுகதை மன்னர்' என்று போற்றப்படுகிறார். புதுமைப்பித்தன் என்ற சொ. விருதாசலம் 1906-இல் பிறந்து, நாற்பத்திரண்டாவது வயதில் காலமானார். புதுமைப்பித்தன் 90 சிறுகதைகளோடு கவிதை, கட்டுரை, மொழிபெயர்ப்பு என்று இலக்கியத்தோடு சம்பந்தப்பட்ட துறைகளில் உழைத்தார். கேலி, கிண்டல், அலட்சியம் என்று பலவிதமான தோரணையில் அவர் சிறுகதைகள் எழுதினார். மொழியை அசாத்தியமான திறமையோடு அவர் கையாண்டார். ஆகவே அவர் சிறுகதைகளுக்கு வளமும், சக்தியும் ஊட்டின. அன்றாட வாழ்வின் நடை முறைச் சிக்கல்களையே அவர் கதைகளாக எழுதினார். புராணக் கதைகளுக்கு நவீனத்துவத்தை ஏற்றிப் புதுவிளக் கந் தந்துள்ளார். நனவோடை போன்ற புதிய உத்தி களைக் கையாண்டார். கருத்தின் வேகத்தையே முதன்மை யாகக்கொண்டு, வார்த்தைகள் வெறும் தொடர்புச் சாதனமாக மட்டும் கொண்டு, தாவிச் செல்லும் ஒரு புதிய நடையை உருவாக்கினார். புதுமைப்பித்தனின் சிறு கதைகளில் அன்றிரவு, மனித யந்திரம், சங்குத்தேவன், தர்மம், ஒருநாள் கழிந்தது, கடவுளும் கந்தசாமிப்பிள்ளை யும், நினைவுப் பாதை, ஞானக்குகை, சாப விமோசனம், பொன்னகரம் முதலியன அவரது கதைகளில் குறிப்பிடத் தக்கன

## கு. ப. ராஜகோபாலன்

தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் 'மணிக்கொடி' (1933) சஞ்சிகைக்கு மிக முக்கியமான பங்குண்டு. இக்காலகட்டத் தில் புதுமைப்பித்தன், ந. பிச்சமூர்த்தி, கு. ப. ராஜ கோபாலன், சிதம்பர சுப்பிரமணியன், சி. சு. செல்லப்பா போன்றவர்கள் மணிக்கொடியில் எழுதத் தொடங்கினார்

கள். இவர்களைத் தவிர, மௌனி போன்றோரும் அவ்வப் போது எழுதி வந்தனர். இவ்வெழுத்தாளர்களே பின் னாளில் மணிக்கொடிக் குழு என்று அழைக்கப்பட்டனர்.

புதுமைப்பித்தன் காலத்தில் எழுதியவர் கு. ப. ராஜ கோபாலன் ஆவார், மனவுணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து அதனை ஓரளவு நடப்பியல், மனோதத்துவம் என்று இணைத்து எழுதியவர் என்றே அவரைக் குறிப்பிட வேண்டும். இவரின் சிறுகதைகள் பெரும்பாலானவை ஆண் — பெண் உறவையே அடிப்படையாகக்கொண் டவை. பாலுணர்வு என்பதைக் கதைகளில் கலைத்திற னோடு கையாண்ட பெருமை அவருக்குண்டு. ஆற்றாமை, விடியுமா?, திரை, சிறிது வெளிச்சம், மோகினி மாயை ஆகியவற்றை கு. ப. ராஜகோபாலனின் சிறந்த சிறுகதை களாகக்கொள்ளலாம். தான் எடுத்துக்கொண்ட கருப் பொருளுக்கு உகந்த மாதிரியான சொற்களையும், வார்த் தைகளையும் அதன் பூரணமான நளினத்தோடு பயன் படுத்தினார். சிறுகதைகளுக்கு கு. ப. ராஜகோபாலன் நுட்பமாகக் கவிதைச் சக்தியை ஊட்டினார் என்றே சொல்ல வேண்டும்.

## ஏனைய சிறுகதை ஆசிரியர்கள்

புதுமைப்பித்தன், கு. ப. ராஜகோபாலன் போலவே ஏனைய மணிக்கொடி எழுத்தாளர்களும் ஒவ்வொரு வகை யில் சிறந்து விளங்கினர். பி. எஸ். ராமையாவின் அனுப வக் களமும், ந. பிச்சமூர்த்தியின் தத்துவச் சிந்தனைகளும், சி. சு. செல்லப்பாவின் நுணுக்கச் சித்திரிப்பும், ந. சிதம்பர சுப்பிரமணியத்தின் சீரிய கதைப் பண்பும் தமிழ்ச் சிறுகதை களுக்கு வளம் சேர்த்தன. இவர்களில் மௌனி தனி நிலையில் குறிப்பிடத்தக்கவர். 'தமிழ்ச் சிறுகதையின் திருமூலர்' என்று புதுமைப்பித்தனால் மௌனி பாராட் டப்பட்டார். அவரது கதைகளில் பேசப்பட்ட பொருள்

காதலின் தோல்வி, சோகம், மனப்பிரமை என்பனவாம். அவரது கதாமாந்தர்கள் மனதால் வாழ்பவர்கள். சற்றே வித்தியாசமான மனிதர்கள், மௌனியின் கதைகளில் நிகழ்ச்சிகள் குறைவு; நெகிழ்ச்சிகள் மிகுதி. மணிக்கொடிப் பத்திரிகையில் பத்துப் பன்னிரண்டு சிறுகதைகளை எழுதி னார். பின்பு அனேகமாக எழுதுவதையே நிறுத்திவிட் டார். நாற்பதாண்டுகள் கழித்து இன்னும் நான்கைந்து சிறுகதைகளை எழுதினார். மௌனி மொத்தமாகப் பதினைந்து சிறுகதைகள் தான் எழுதியிருக்கிறார். ஆனால் எழுதிய வகையில் நேர்த்தியாகவே எழுதியிருக்கிறார். இவ ரது கதைகள் வாசகனுக்கு முதல் வாசிப்பில் புரியும் என்று கூறமுடியாது. புரியாத தன்மையும், இருண்மையும் இவ ரது கதைகளில் உள்ளன. அழியாச்சுடர், பிரபஞ்சகானம், குடைநிழல், எங்கிருந்தோ வந்தான் போன்றன இவரது சிறுகதைகளில் குறிப்பிடத்தக்கவை.

தமிழ்ச் சிறுகதைத்துறைக்கு வளம் சேர்த்த ஏனைய எழுத்தாளர்களாக ந. பிச்சமூர்த்தி, லா. ச. ராமாமிர் தம், க. நா. சுப்பிரமணியம், பி. எஸ். ராமையா, கு. அழகிரிசாமி முதலானோரைக் குறிப்பிடலாம். ந. பிச்ச மூர்த்தியின் சிறுகதைகளில் பெரிய நாயகி உலா, மாங் காய்த் தலை, காவல் என்பன குறிப்பிடத்தக்கன. சூழ்நிலையிலும் காட்சிப்படுத்துவதிலும் அவருக்கு ஆரம்ப காலத்தில் அக்கறை அதிகமாக இருந்தது. வார்த்தை களுக்கு விஷேசமான அர்த்தம் கொடுத்து அதிகமான வார்த்தைகளோடு சிறுகதைகளை எழுதுபவர் லா. ச. ராமாமிர்தம் ஆவார். அலங்காரம் என்பதை ஒழித்து சோதனை, புதுமை என்று சிறுகதைகள் எழுதியவர் க. நா. சுப்பிரமணியம் அவரது சிறுகதைகளில் அறிவு என்ற அம்சம் சற்றுத் தூக்கலாகவும், உணர்ச்சி என்பது அடங்கியுமிருப்பது சிறப்பு அம்சமாகும். கதை சொல் வதையே சிறுகதையின் பிரதான இலட்சியம் என்று கதை எழுதியவர் பி. எஸ். ராமையா. இவர்களோடு தமிழ்ச் சிறுகதைத் துறையில் சி. சு. செல்லப்பா, அகிலன்,

தி. ஜானகிராமன், ஜெகசிற்பியன் என்போரைக் குறிப் பிடலாம்.

## கு. அழகிரிசாமி

தமிழ்ச் சிறுகதைகளுக்கு அழுத்தமான காவிய மரபு தந்தவர் கு. அழகிரிசாமி ஆவார். அவர் கதை சொல் லும் கலை கைவரப்பெற்றவர். அடிப்படையான கருத் தும் சம்பவச் செறிவும் அமைதியான நடையும் அவர் சிறுகதைகளைக் காவிய மரபின் தொடர்ச்சியாக எண்ண வைத்தன. மொழியை நேராகவும், எளிமையாகவும் அவர் கையாண்டார் என்பதோடு, அதற்கு மேலும் கதைகள் மூலமாகவே மொழியை நிரந்தரமாக ஆக்கினர். கதைகளை முடிக்காமலேயே முடித்து வைத்துக் கொண் டார். மனித மனவியல்புகள், வாழ்க்கைச் சிக்கல்கள், நடை முறைப் பிரச்சினைகள் எல்லாம் அவர் சிறுகதைகளில் பிரதானமாக இடம்பெற்றன. அன்பளிப்பு, இரண்டு பெண்கள், திரிவேணி, குமாரபுர ஸ்டேஷன் ஆகியவற்றை கு. அழகிரிசாமி சிறுகதைகளில் குறிப்பிடவேண்டியவை எனலாம். சிறுகதைகளோடு கட்டுரைகள், நாவல்கள், நாடகங்கள், கவிதைகள், கீர்த்தனைகள் எனப் பல துறை களில் இவர் ஈடுபட்டிருந்தார்.

இவரது கதைகளின் உள்ளடக்கம், அமைப்பு அனைத் திலுமே சிக்கலற்ற எளிமைத் தன்மையுண்டு. மனித உணர்ச்சிகள் இவரது கதைகளில் அடிநாதமாகத் திகழ் கின்றன. அழகிரிசாமி தனது கதைகளில் தீண்டாமை, வேலையில்லாத் திண்டாட்டம், காதல், வறுமை போன்ற வற்றைக் கதைக் கருக்களாகக்கொண்டார்.

அறுபதுகளில் புகழ்பெற்று விளங்கிய சிறுகதையாசிரி யர் ஜெயகாந்தனாவார். ''சரஸ்வதி'' என்னும் இதழ் வாயிலாக எழுதத்தொடங்கிய அவர் ''ஆனந்தவிகடன்''

மூலம் மக்களிடையே வரவேற்பைப் பெற்றார். வேகம், வீரியம், கருத்து ஆகியவற்றிற்கு முக்கியத்துவம்கொடுத்து ஜெயகாந்தன் சிறுகதைகள் எழுதினார். வாழ்க்கை விமர்சனமாகவும், அடைய வேண்டிய இலட்சியத்தைச் சுட்டிக்காட்டுவதாகவும் அவர் சிறுகதைகள் இருந்தன. அவர் சமூகத்தில் அடக்கி ஒடுக்கப்பட்ட மக்களைத் தன் சிறுகதைகளில் சித்திரித்துள்ளார்.

இவர்களைவிட தமிழ்ச் சிறுகதைத் துறைக்கு உரமூட்டிய எழுத்தாளர்கள் பலருள்ளனர். அசோகமித்திரன், கிருஷ்ணன் நம்பி, வி. ராஜநாராயணன், சா. கந்தசாமி, அம்மை, சுஜாதா, இந்திரா பார்த்தசாரதி, நா. ரகுநாதன், விந்தன், வண்ணநிலவன், நீல. பத்மநாதன், பாலகுமாரன், இந்துமதி, ஐராவதம் எனப் பட்டியலை நீட்டிக்கொண்டே போகலாம்.

ஆதாரம்: டாக்டர் ம. இராமலிங்கம்
(மனோரமா - 1995),
சா. கந்தசாமி (சிறந்த சிறுகதைகள்),
மாலன் (அன்று - தேர்வும் தொகுப்பும்)



# ஒரு நாள் கழிந்தது

## புதுமைப்பித்தன்

''கமலம், அந்தக் கூஜாவிலே தண்ணீர் எடுத்தா! வெற்றிலைச் செல்லம் எங்கே? வச்சது வச்ச இடத்திலேயே இருந்தால் தானே?'' என்று முணுமுணுத்தார் முருக தாசர்.

கையில் இருக்கும் கோரைப் பாயை விரிப்பதே ஒரு ஜாலவித்தை. நெடுநாள் உண்மையாக உழைத்தும் பென் ஷன் கொடுக்கப்படாததால், அது நடு மத்தியில் இரண் டாகக் கிழிந்து, ஒரு கோடியில் மட்டிலும் ஒட்டிக்கொண் டிருந்தது. அதை விரிப்பது என்றால், முதலில் உதறித் தரையில் போட்டுவிட்டு, கிழிந்து கிடக்கும் இரண்டு துண்டுகளையும் சேர்த்துப் பொருந்த வைக்க வேண்டும். அதுதான் பூர்வாங்க வேலை. பின்பு விடுதலை பெற முயற்சிக்கும் அதன் கோரைக் கீற்றுகள் முதுகில் குத்தாமல் இருக்க, ஒரு துண்டையோ அல்லது மனைவியின் புடவை யையோ அல்லது குழந்தையின் பாவாடையையோ, எதையாவது எடுத்து மேலே விரிக்க வேண்டும்.

முருகதாசரைப் பொறுத்தவரை – அது அவரது புனை பெயர் – அது இரண்டுபேர் செய்ய வேண்டிய காரியம்.

மறுபடியும், ''கமலா!'' என்று கூப்பிட்டார்.

சமையல் + உக்ராண + ஸ்நான அறை, மூன்று நான்கு கட்டுகள் தாண்டி, துண்டாக, அலாதியாக இருப்பதால், இவருடைய பாய் விரிப்புக் கஷ்டங்கள் அந்த அம்மை யாருக்கு எட்டவில்லை.

சென்னையில் 'ஒட்டுக்குடித்தனம்' என்பது ஒரு ரச மான விஷயம். வீட்டுச் சொந்தக்காரன், குடியிருக்க

வருகிறவர்கள் எல்லோரும் 'திருக்கழுக்குன்றத்துக் கழுகு' என்று நினைத்துக் கொள்ளுவானேனோ என்னமோ!

'குடித்தனக்காரர் குடியிருக்க இரண்டு ரூம் காலி' என்று வெளியில் போட்டிருந்த போர்டை நம்பித்தான் முருகதாசர் வீடு – வேட்டையின் போது அங்கே நுழைந்தார்.

உள்ளே வீட்டின் பாக வசதிதான் விசித்திரமாக இருந்தது. முன் பக்கம், ஒற்றைச் சன்னல் படைத்த ஒரு சிற்றறை. அதற்கப்புறம், எங்கோ பல கட்டுகள் தாண்டி மற்றொரு அறை. அது தான் சமையல் வகையறாவுக்கு, முதல் அறை படிக்க படுக்க, நாலு பேர் வந்தால் பேச - இவை எல்லாவற்றிற்கும் பொது இடம். முதலில், முருகதாசர் பொருளாதாரச் சலுகையை உத்தேசித்தே, அதில் குடியிருக்கலாம் என்று துணிந்தார். அதனால், தமக்கும் தம் சகதர்மிணிக்கும் இப்படி நிரந்தரமான 'பிளவு' இருக்கும் என்று சிறிதும் எட்டி யோசிக்கவில்லை; மேலும் அவர், யோசிக்கக்கூடியவரும் அல்லர்.

பக்கத்தில் இருந்த அரிக்கன் விளக்கை எடுத்துக் கொண்டு, அவர் சமையல் பகுதியை நோக்கிப் பிரயாணமானார்.

இடைவழியில், குழாயடியில் உள்ள வழுக்குப் பிரதேசம், அடுத்த பகுதிக்காரரர் விறகுக் கொட்டில் முதலிய விபத்துக்கள் உள்ள 'பிராட்வேயை' எல்லாம் பொருட்படுத்தாது, ஒருவாறு வந்து சேர்ந்தார். சமையல் அறை வாசலில் ஒரே புகைமயம். 'கமலம்!' என்று கம்மிய குரலில் கூப்பிட்டுக்கொண்டு, உள்ளே நுழைந்தார்.

உள்ளே புகைத் திரைக்கு அப்பாலிருந்து, "வீடோ லட்சணமோ, விறகைத்தான் பாத்துப் பாத்து வாங்கிக் கொண்டு வந்தியளே! ஒங்களுக்கண்ணு தண்ணீலே முக்கிக் குடுத்தானா? எரியவே மாட்டுதில்லை! இங்கே என்ன

இப்போ? விறகு வாங்கின சீரைப் பாத்து மகிழ வந்திட்டி யளாக்கும்!'' என்று வரவேற்புப் பத்திரம் வாசிக்கப் பட்டது.

''தீப்பெட்டியை இப்படி எடு! அதுக்காகத்தான் வந் தேன்!'' என்று நடைப்பக்கமாகப் பின்நோக்கி நடந்தார்.

''இங்கே குச்சியுமில்லை, கிச்சியுமில்லை! அலமுவெத் தீப்பெட்டி வாங்க அனுப்பிச்சேன். மண்ணெண்ணெய் விளக்கெ நீங்க தான் துடைச்சு கொள்ளணும்!'' என்றாள் கமலம்.

குழந்தையை அந்தியிலே வெளியிலே அனுப்பிச்சையே, நான் வந்த பிறகு வாங்கிக்கொள்ளப்படாதா'' என்று அதட்டினார் முருகதாசர்.

''ஆமாம், சொல்ல மறந்தே போயிட்டுதே......... செட்டியார் வந்து விட்டுப் போனார்; நாளை விடியன்னை வருவாராம்!'' என்றாள் கமலம்.

முருகதாசர் இந்தப் பாசுபதாஸ்திரத்தை எதிர்பார்க்க வில்லை.

''வந்தா, வெறுங்கையை வீசிக்கிட்டு போகவேண்டி யது தான்! வர்றதுக்கு நேரம் காலம் இல்லை?'' என்று முணுமுணுத்துக் கொண்டே வெளியேற முயற்சித்தார்.

''அங்கே எங்கே போயிட்டிஹ, ஒங்களைத்தானே! கொஞ்சம் நல்லெண்ணை வாங்கிக்கிட்டு வாருங்களேன்!''

''எங்கிட்ட இப்போ துட்டுமில்லே, காசுமில்லை!'' என்று திரும்பி நின்று பதிலளித்தார் முருகதாசர்.

''அதுவும் அப்படியா இன்னா இந்த மிளவொட்டி யிலே மூணு துட்டு இருக்கு; அதை எடுத்துக்கிட்டுப் போங்க!''

''வந்ததுக்கு ஒரு வேலையா? அங்கே ஒருபாடு எழுதித் தொலைக்கணும். இங்கே உனக்கு இப்ப தான் எண்ணெ புண்ணாக்கு - பகலெல்லாம் என்ன செய்திக்கிட்டு இருந்தே? இருட்னம் பொறவா எண்ணை வாங்றது! எல்லாம் நாளைக்குப் பார்த்துக்கலாம்!''

சோம்பல் வந்தா சாத்திரமும் வரும். எல்லாம் வரும். ஏன், அண்ணைக்குப் போய் வாங்கிட்டு வரலியா – எல்லாம் ஒங்களுக்குத் தான். இப்பத்தான் அப்பளக்காரன் வந்து கொடுத்துவிட்டுப் போனான். பிரியமா சாப்பிடுவேனென்று சொன்னேன். பின்னே அந்தச் சின்னக் கொரங்கே என்ன இன்னும் காணலே! போனாப் போனது தான்; நீங்கதான் சித்தப் பாருங்களேன்!

இவ்வளவிற்கும் அவர் இருந்தால்தானே! விறகுப் பிரதேசத்தைத் தாண்டி வழுக்கும் பிரதேசத்தை எட்டி விட்டார். புகையையும் பேச்சையும் தப்பி வந்தால் போதும் என்றாகி விட்டது. முருகதாசரின் ஆஸ்தான அறையில் ஒரு விசித்திரம் என்னவென்றால் சென்னையில் 'லைட்டிங் டைம்' அட்டவணையைக் கூட மதிக்காமல், அது இருண்டுவிடும்.

இம்மாதிரி மண்ணெண்ணெய் நெருக்கடி ஏற்படாத காலங்களில் அந்த அறைக்குத்தான் முதலில் இராத்திரி. ஆனால், எண்ணெய் நெருக்கடிக் காலங்களில் சிவபிரானின் ஒற்றைக் கண் போன்ற அந்த அறையின் சன்னல் எதிர்ப்பக்கம் நிற்கும் மின்சார விளக்குக் கம்பத்திலிருந்து கொஞ்சம் வெளிச்சத்தைப் பிச்சை வாங்கும். கார்ப்பொரேசன் தயவு வரும்வரை, ஸ்ரீமுருகதாசர் வேறு வழியில்லாமல், தெரு நடையில் நின்று அலமுவின் வருகையை எதிர்நோக்கியிருக்க வேண்டியதாயிற்று.

முருகதாசர் வானத்தை அளக்கும் கதைகளைக் கட்டுவதில் மிகவும் சமர்த்தர்; 'சாகாவரம் பெற்ற' கதைகளும் எழுதுவார். அந்தத் திறமையை உத்தேசித்து, ஒரு விளம்

பரக் கம்பெனி மாதம் முப்பது ரூபாய்க்கு வானத்தை யளக்கும் அவரது கற்பனைத் திறமையைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டது அதனால் அவர், வீர புருஷர்களை யும், அழியாத சித்திரங்களையும் எழுத்தோவியமாகத் தீட்டுவதை விட்டுவிட்டு, சோயாபீன்ஸ் முதல், மெழுகு வர்த்தி வரையிலும். வெளிநாடுகளிலிருந்து வந்து குவியும் பண்டங்களின் காவியங்களை இயற்றிக்கொண்டிருக்கிறார். 'டபாஸா' வீரிய மாத்திரையின் மீது பாடிய பரணியும், தேயிலைப் பானத்தின் சுயசரிதையும், அந்தத் தமிழ் தெரியாத வெள்ளைக்காரனையும் இவர்மீது அனுதாபம் காட்டும்படி செய்து விட்டன. இதற்காகத்தான் அந்த முப்பது ரூபாய்.

வீட்டு எதிரில் நிற்கும் மின்சார விளக்கின் உதவியைக் கொண்டும் பிள்ளையவர்களால் அலமுவைக் கண்டுபிடிக்க இயலவில்லை. வெற்றிலை, வேலை. குழந்தை வராத காரணம் - எல்லாம் அவர்து மனத்தில் கவலையைக் கொண்டு கொட்டின. நடையிலிருந்து கீழே இறங்கிச் சந்தின் மூலை வரை சென்று பார்த்து வரலாமா என்று புறப்பட்டார்.

பக்தி மார்க்கத்தில் ஏகாக்கிரக சிந்தையைப் பற்றிப் பிரமாதமாக வர்ணிக்கிறார்கள். மனம் ஒரே விஷயத்தில் லயித்து விட்டால் போதுமாம். பிள்ளையவர்களைப் பொறுத்தவரை, அவர் இந்தப் 'பணம்' என்ற மூன் றெழுத்து மந்திரத்தில் தீவிர சிந்தனை செலுத்துபவர். பணத்தை வாரிச் சேர்த்துக் குபேரனாகிவிட வேண்டும் என்ற எண்ணம் ஒன்றுமில்லை. கவலையில்லாமல் ஏதோ சாப்பிட்டோம், வேலை பார்த்தோம், வந்தோம் என்று இருக்கவேண்டும் என்பதற்காக, எத்தனையோ வித்தைகளை எல்லாம் செய்துவிட்டார். அவருடைய குடும்பத்தின் வரவுசெலவுத் திட்டத்தை மட்டிலும், அவரால் எப் பொழுதும் சமன் செய்ய முடியவில்லை. நிதி மந்திரியாக இருந்தால், பட்ஜட்டில் துண்டு விழுவதற்குப் பொருளா

தாரக் காரணங்கள் காட்டிவிட்டு, உபமான்யங்களைத் தைரியமாகக் கேட்கலாம். கவலையில்லாமல், கொஞ்சம் உடம்பில் பிடிக்காமல் கடன் கேட்டுப் புறப்படுவதற்கு முடியுமா? குடும்பச் செலவு என்றால், சர்க்கார் செல வாகுமா?

கவலை இருக்கப்படாது என்ற உறுதியின் பேரில் தான் நம்பிக்கை என்ற இலட்சியத்தை மட்டும் திருப்தி செய்விக்க, 'சாகா வரம் பெற்ற' கதைகளை எழுது வதைக் கொஞ்சம் கட்டி வைத்துவிட்டு, இந்த 'லிப்டன் தேயிலை', காப்பி, கொக்கோ ஆகியவற்றின் மான்மியங் களை அவர் எழுத ஆரம்பித்தார். ஒரு பெரிய நாவல் மட்டிலும் எழுதிவிட்டால் அது ஒரு பொன் காய்க்கும் மரமாகிவிடும் என்று அவர் நெஞ்சழுத்தத்துடன் நினைத்த காலங்களும் உண்டு. இப்பொழுது அது ஒரு நெடுந்தூர இலட்சியமாகவே மாறிவிட்டது.

முன்பாவது, அதாவது நம்பிக்கை காலத்தில், ஏதோ நினைத்ததைக் கிறுக்கி வைக்கக் காகிதப் பஞ்சமாவது இல்லாமல் இருந்தது. அப்பொழுது ஒரு பத்திரிகை ஆபீ சில் வேலை. ஆனால், இப்பொழுது காசு கொடுத்து வாங்காவிட்டால் முதுகில்தான் எழுதிக்கொள்ள வேண்டும். முருகதாசர் நல்ல புத்திசாலி; அதனால்தான் முதுகில் எழுதிக்கொள்ளவில்லை. யாராவது ஒரு நண்பரைக்கண்டு விட்டால் போதும்; தமது தூர இலட்சியத்தைப்பற்றி அவரிடம் ஐந்து நிமிஷமாவது பேசாமல் அவரைவிடமாட் டார். நண்பர்கள் எஸ். பி. ஸி. ஏ. (ஜீவஹிம்சை நிவார ணச் சங்கம்) யின் அங்கத்தினர்களோ என்னவோ, அத்தனையையும் சகித்துக்கொண்டிருப்பார்கள்...

சந்தில் திரும்பிப் பார்த்தால் அலமுவின் ராஜ்யம் நடந்துகொண்டிருந்தது.

''ஏட்டி, என்ன! நீயோ உன் லட்சணமோ!'' என்று ஆரம்பித்தார் முருகதாசர்

ஒரு ரிக்ஷா வண்டி, ஏர்க்கால் பக்கத்தில் வண்டிக்காரன் உட்கார்ந்துகொண்டிருக்கிறான். அலமு ஒரு சுண்டெலி மாதிரி, ஜம்மென்று மெத்தையில் உட்கார்ந்திருக்கிறாள். ரிக்ஷாக்காரனுடன் ஏதோ நீண்ட சம்பாஷணை நடந்துகொண்டிருந்தது போலும்!

''ஏட்டி!'' என்றார் முருகதாசர் மறுபடியும்.

''இல்லையப்பா! நீ இனிமெ என்னை அலமுன்னு கூப்பிடுவேன்னியே!'' என்று சொல்லிக்கொண்டே, வண்டியிலிருந்து இறங்கப் பிரம்மப் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தாள்.

''தீப்பெட்டி எங்கட்டீ?'' என்றார் முருகதாசர் மறுபடியும்.

''கடைக்காரன் குடுக்க மாட்டேங்கறான், அப்பா!''

''குடுக்காதெ போனா நேரெ வீட்டுக்கு வாரது! இங்கே என்ன இருப்பு?''

''அப்படிக் கேளுங்க சாமி! நம்ம கொளந்தென்னு மெரட்டாமே சொல்லிப் பார்த்தேனுங்க. வீட்டுக்கு வண்டியிலே கொண்டாந்து வுடணுமுண்ணு மொண்டி பண்ணுதுங்க. எனக்குக் காலுலே சுளுக்கு. அந்தச் சின்னாம் பயலே காணும்...'' என்று நீட்டிக்கொண்டே போனான் ரிக்ஷாக்காரன்.

''அப்பா, அவன் பங்கஜத்தெ மாத்திரம் கூட்டிக்கிட்டே போறானே'' என்றாள் அலமு. பங்கஜம் எதிர் வீட்டு சப்ரிஜிஸ்திரார் குழந்தை. அது ரிக்ஷாவிலும் போகும்! மோட்டாரிலும் போகும். அந்த விஷயம் ரிக்ஷாவுக்குத் தான் புரியுமா, குழந்தைக்குத்தான் புரியுமா?

''அலமு! ராத்திரிலெ கொழந்தைகள் ரிக்ஷாவிலே போகப்படாதுட்டீ! எறங்கி வா!'' என்று குழந்தையைத்

தூக்கிக்கொண்டு, வாடிக்கைக் கடைக்காரனிடம் சென்றார் முருகதாசர்.

பிள்ளையவர்கள் கடையை எட்டு முன்பே கடைக்காரன் ''சாமி! இந்த மாதிரியிருந்தாக் கட்டுமா? போன மாசத்திலே தீர்க்கலியே! நானும் சொல்லிச் சொல்லிப் பார்த்தாச்சு. பாக்கியை முடிச்சு, கணக்கெத் தீர்த்திடுங்க! எனக்குக் குடுத்துக் கட்டாது. நான் பொளைக்க வந்தவன்!'' என்றான்.

''நானும் பிழைக்க வந்தவன்தான். எல்லாரும் சாகவா வருகிறார்கள்! மின்னெ பின்னெதான் இருக்கும். நான் என்ன கொடுக்கமாட்டேன் என்று சொல்லுகிறேனா?''

'போங்க சாமி அது ஒண்ணுதான் பாக்கி! ரூ. 2-5-4 ஆச்சு; எப்ப வரும்?''

''தீப்பெட்டியைக் குடு சொல்றேன்!

''பெட்டிக்கென்ன பிரமாதம்! இந்தாருங்க. எப்ப வரும்?''

''எப்பவா? சம்பளம் நாளைக்குப் போட்ருவாங்கன்னு நினைக்கிறேன்! நாளை இல்லாவிட்டால் திங்கக்கிழமை.''

''திங்கக்கிழமெ நிச்சயந்தானே? நான் சீட்டுக் கட்டணும்!'' என்றான்.

''சரி பார்க்கிறேன்!'' என்று திரும்பினார் தாசர்.

''பார்க்கிறேன்னு சொல்ல வேண்டாம். நிச்சயமாக வேண்டும்!''

ஒரு கவலை தீர்ந்தது...... அதாவது திங்கட்கிழமை வரை.

பாதி வழியில் போகையில், ''அப்பா!'' என்றது குழந்தை.

அவர் எதையோ நினைத்துக்கொண்டிருந்ததால் தன்னையறியாமல் கொஞ்சம் கடினமாக, ''என்ன!'' என்றார்.

''நீதான் கோவிச்சுக்கிறியே. அப்பா! நான் சொல்ல மாட்டேன், போ''

''கோவம் என்னட்டி, கோவம்! சும்மா சொல்லு!''

''அதோ பார், பல்லு மாமா''

முருகதாசரின் நண்பர் சுப்பிரமணிய பிள்ளைக்குக் கொஞ்சம் உயர்ந்த பற்கள். அவை, வெளியே நீண்டு கொண்டு, தமது இருப்பை அனாவசியமாக உலகத்திற்கு அறிவித்துக்கொண்டிருந்தன. அதனால் அலமு அவருக்கு இட்ட காரண இடுகுறிப் பெயர் அது.

''எங்கட்டி''!

''அதோ பார், வீட்டு நடேலே! என்னை எறக்கி விடப்பா!'' என்று, அவரது கையிலிருந்து வழுகி, விடுவித்துக்கொண்டு, வீட்டிற்கு ஓட ஆரம்பித்தது.

''மெதுவா! மெதுவா!'' என்றார் பிள்ளை! குழந்தையா கேட்கும்?

''மாட்டேன்'' என்றது. அதற்கப்புறம் ஏக களேபரம்.

பாவாடை தடுக்கியதோ என்னமோ, அலமு வலுக்கட்டாயமாக அங்கப் பிரதக்ஷணம் செய்ய ஆரம்பித்தாள்.

பிள்ளையவர்கள் ஓடிப்போய்க் குழந்தையை வாரி எடுத்தார்.

ஆனால் இவர் பதட்டத்திற்கு ஏற்ப, அங்கு குழந்தைக்கு ஒன்றும் ஏற்படவில்லை.

"தோளுக்கு மேலே தொண்ணூறு, தொடச்சுப் பாத்தா ஒண்ணுமில்லே:" என்று பாடிக்கொண்டு குழந்தை எழுந்தது.

"என்ன ஸார், குழந்தையை நீங்க இப்படி விடலாமா?" என்று சொல்லிக்கொண்டே சுப்பிரமணியம் அவர்கள் பக்கம் வந்தார்.

"என்ன ஸார், செய்யட்டும்! என்ன சொன்னாலும் கேக்கிறதில்லை என்ற உறுதி மனசிலே ஏறிப்போயிருக்கு. வெளியே புறப்பட்டாச்சா! அப்புறம் தேடிக்கொண்டு பின்னோட பத்துப் பேர். இவளைக் கடைக்கனுப்பிச்சுட்டா தாயார். இவ்வளவு நேரம் அந்த ரிக்ஷாக்காரனோட தர்க்கம் – என்ன செய்கிறது! வாருங்கள் ஸார், உள்ளே! ஒன் மினிட்! விளக்கை ஏத்துகிறேன்."

குழந்தை அலமு அதற்குள் வீட்டிற்குள், "பல்லு மாமா வந்துவிட்டார்!" என்று மெதுவாக உச்சஸ்தாயியில் விளம்பரம் செய்துகொண்டு ஓடிவிட்டாள்.

"குழந்தை துருதுருவென்று வருகிறதே! பள்ளிக்கூடத்திற்காவது அனுப்பக்கூடாதா" என்றார் நண்பர்.

"ஆமாம் ஸார், தொந்தரவு சகிக்கலே அங்கே தான் கொண்டு தள்ளணும். வயசு கொஞ்சம் ஆகட்டுமே என்று பார்க்கிறேன்" என்றார் முருகதாசர், விளக்குத் திரியை உயர்த்திக்கொண்டே.

"நேத்து பீச்சுக்குப் போயிருந்தேன்: சுந்தரத்தைப் பார்த்தேன்..." என்று ஆரம்பித்தார் சுப்பிரமணிய பிள்ளை.

"அந்த ராஸ்கல் வந்துட்டானா! என்றைக்கும் அவன் தொல்லை தான் பெரிய தொல்லையாக இருக்

கிறது. இங்கே வந்தான்னா ஆபீஸுக்கு வந்து யாருக்கா வது வத்தி வச்சிட்டுப் போயிடரது...மின்னே வந்தப்போ என்ன எழவு சொன்னானோ. அந்த ஆர்ட்டிஸ்ட் 'பதி' இருந்தானே, அவனுக்குச் சீட்டுக் கொடுக்க வழி பண் ணிட்டான்...'' என்று படபடவென்று பேசிக்கொண்டே போனார் முருகதாசர்.

''அப்படிப் பாத்தா உலகத்திலேயே யார்தான் ஸார் நல்லவன்! அவன் உங்களைப் பத்தி ரொம்பப் பிர மாதமாக அல்லவா கண்ட இடத்திலெல்லாம் புகழ்ந்து கொண்டிருக்கிறான்?''

''சவத்தெத் தள்ளுங்க, ஸார் பேன் பார்த்தாலும் பார்க்கும், காதை அறுத்தாலும் அறுக்கும். அவன் சங் காத்தமே நமக்கு வேண்டாம். நீங்க என்ன சொல்ல வாயெடுத்தீர்கள்?''

''அதுதான், உங்களெப் பத்தித்தான் ஒரு இங்கிலீஷ் காரனிடம் பிரமாதமாகப் பேசிக்கொண்டிருந்தான்...''

''இவ்வளவுதானா! கதையை எழுதரேன், அல்லது கத்தரிக்காயை அறுக்கிறேன், இவனுக்கென்ன...?

அதே சமயத்தில் வெளியிலிருந்து, முருகதாஸ்! முருகதாஸ்!'' என்று யாரோ கூப்பிட்டார்கள்.

''அதுதான்! அவன்தான் வந்திருக்கிறான் போலிருக் கிறது! பயலுக்கு நூறு வயசு...''

''சைத்தான். நினைக்குமுன்னால் வந்து நிற்பான். என்பதுதான்!'' என்று முணுமுணுத்தார் முருகதாசர்.

பிறகு அவர் எழுந்து நின்று வெளியில் தலையை நீட்டி, ''யாரது?'' என்றார்.

''என்ன! நான் தான் சுந்தரம், இன்னும் என் குரல் தெரியவில்லையா?'' என்று உரத்த குரலில், கடகட வென்று சிரித்துக்கொண்டு உள்ளே நுழைந்தார் வந்தவர். அவருடைய சிரிப்புக்கு இசைந்தபடி காலில் போட்டிருக்கும் ஜோடு தாளம் போட்டது.

''என்ன, சுந்தரமா; வா! வா! இப்பொத்தான் உன்னைப்பற்றி பேசிக்கொண்டிருந்தோம், நீயும் வந்தாய்! காப்பி போடச் சொல்லட்டுமா? அலமு! அலமு!'' என்று உரக்கக் கூவினார் முருகதாசர்.

எங்கிருந்தோ, ''என்னப்பா!'' என்று அலமுவின் குரல் வந்தது,

''அம்மாவை மூணு கப் காப்பி போடச் சொல்லு சீக்கிரம் ஆகணும்!''

''நீ என்ன பத்திரிகையை விட்டுவிட்டாயாமே! இப் பத்தான் கேள்விப்பட்டேன்,''

''வயிற்றுப் பிழைப்பிற்கு எதில் இருந்தால் என்ன? சீலைப்பேன் குத்துகிறதும் ஒரு 'பிஸினஸ்' ஆக இருந்தது. அதில் ஒரு 'சான்ஸ்' கிடைத்தால், அதையும் விட்டா வைக்கிறது? நான் பத்திரிகையை விட்டுவிட்டா, கதை எழுதாமல் இருந்து விடுவேனா? ஒரு பெரிய நாவலுக்குப் 'பிளான்' போட்டிருக்கேன். தமிழன்களுக்கு அதிர்ஷ்டம் இருந்தால், எனக்குக் காகிதம் வாங்கவாவது காசு கிடைக் கும். அதில் 'சென்ட்ரல் ஐடியா' என்ன தெரியுமா...?''

''நீங்க நேற்றுப் பொருட்காட்சிக்குப் போனீர் களாமே?'' என்று பேச்சை மாற்ற முயன்றார் சுப்பிர மணியபிள்ளை. இந்த விஷயத்தைத் தொட்டுவிட்டால், முருகதாசர், கீறல் விழுந்த கிராமபோன் பிளேட் மாதிரி விடாமல் திருப்பித் திருப்பி அதையே கதைத்துக்கொண் டிருப்பார்!

''அப்பா காப்பியாயிட்டுது, நீதான் வந்து எடுத்துக்கிட்டுப் போகணும். சுடுது!'' என்று சொல்லிக்கொண்டு, நிலைப்படி இரண்டு பக்கத்தையும் தொட்ட வண்ணமாய் ஒற்றைக்காலை ஒட்டிக்கொண்டு நின்றாள் அலமு.

''அம்மா எங்கே?''

''அம்மா சாதத்தெ வடிச்சுக்கிட்டிருக்கா, அப்பா!''

''சரி! இதோ வாரேன் போ!''

''வாயேன்!''

''வர்ரேன்னா, போட்டீ உள்ளே''

''காப்பி ஆறிப்போயிடும், அப்பா!''

''இதோ ஒரு நிமிஷம்!;' என்று சொல்லிக்கொண்டு, உள்ளே சென்றார்.

''மாமா! நீ என்ன கொண்டாந்தே?'' என்று கேட்டுக்கொண்டு சுப்பிரமணியபிள்ளை மடியில் உட்கார்ந்து கழுத்திலிருக்கும் நெக்டையைப் பிடித்து விளையாட ஆரம்பித்தாள் அலமு.

''அதெப் பிடித்து இழுக்காதே! மாமாவுக்கு கழுத்து வலிக்கும்!'' என்றார் சுந்தரம்பிள்ளை.

''வலிக்காதே! ' என்று மறுபடியும் ஆரம்பித்தாள்.

முருகதாசரும், மேல் துண்டின் உதவியால் ஒரு செம்பை ஏந்திய வண்ணம், உள்ளே நுழைந்தார்.

''என்னப்பா, மூணு டம்ளர் கொண்டாந்தே! எனக்கில்லையா?''

''உனக்கென்னட்டி இங்கே! அம்மா கூடப் போய்ச் சாப்பிடு.''

''மாட்டேன்'' என்று ஒரு டம்ளரை எடுத்து வைத்துக்கொண்டது குழந்தை.

''முருகதாசர் காப்பியை ஆற்றி, சுந்தரம் கையில் ஒரு டம்ளரைக் கொடுத்தார்.

சுந்தரம் வாங்கி மடக் மடக்கென்று மருந்து குடிப்பது போல் குடித்துவிட்டு, ''காப்பி வெகு ஜோர்'' என்று சர்டிபிக்கேட் கொடுத்தான்.

மற்றொரு டம்ளர் சுப்பிரமணிய பிள்ளையிடம் கொடுக்கப்பட்டது.

''மாமா! எனக்கில்லையா!'' என்று அவரிடம் சென்று ஒண்டினாள் அலமு;

''வாடி, நாம் ரெண்டுபேரும் சாப்பிடுவோம்.'' என்றார் முருகதாசர்

''மாமா கூடத்தான்!'' என்று குழந்தை. சுப்பிரமணியபிள்ளை கையிலிருந்த டம்ளரில் அலமுவைக் குடிக்கச் செய்தார்.

பாதியானதும் ''போதும்!'' என்றது குழந்தை.

''இந்தாருங்க ஸார்!'' என்று மற்ற டம்ளரையும் நீட்டினார் முருகதாசர்.

''வேண்டாம் வேண்டாம்! இதுவே போதும்'' என்றார் சுப்பிரமணியபிள்ளை.

''நான்சென்ஸ்!'' என்று சொல்லிவிட்டு, குழந்தை எச்சிற்படுத்தியதைத் தாம் வாங்கிக்கொண்டார் தாசர்.

''நேரமாகிறது, மவுண்டில் ஒரு நண்பரைப் பார்க்க வேண்டும்!'' என்று எழுந்தார் சுந்தரம், ''அதற்குள்ளாகவா? வெற்றிலை போட்டுக்கொண்டு போகலாம்!'' என்றார் முருகதாசர்.

''கையில் எடுத்துக்கொண்டேன். நேரமாகிறது! அப்புறம் பார்க்கிறேன்!'' என்று சொல்லிக்கொண்டு வெளியேறினார் சுந்தரம்.

கையில் இருந்த புகையிலையை வாயில் ஒதுக்கிவிட்டு சிறிது சிரமத்துடன், தமக்கு நேரமாவதைத் தெரிவித்துக் கொண்டார் சுப்பிரமணியபிள்ளை.

தொண்டையைச் சிறிது கனைத்துக்கொண்டு, ''சுப்பிரமணியம், உங்களிடம் ஏதாவது சேஞ் இருக்கிறதா? ஒரு மூன்று ரூபாய் வேண்டும்!'' என்றார் முருகதாசர்.

''ஏது அவசரம்?''

''சம்பளம் போடலே; இங்கு கொஞ்சம் அவசியமாக வேண்டியிருக்கிறது... திங்கட்கிழமை கொடுத்துவிடுகிறேன்!''

''அதற்கென்ன?'' பர்ஸை எடுத்துப் பார்த்துவிட்டு ''இப்போ என் கையில் இதுதான் இருக்கிறது!'' என்று ஓர் எட்டணாவைக் கொடுத்தார் சுப்பிரமணியம்.

''இது போதாதே!'' என்று சொல்லி, அதையும் வாங்கி வைத்துக்கொண்டார் முருகதாசர்.

''அப்போ...'' என்று மீண்டும் ஏதோ ஆரம்பித்தார்.

''பார்ப்போம். எனக்குக் கொஞ்சம் வேலையிருக்கிறது'' என்று சுப்பிரமணியமும் விடைபெற்றுச் சென்றார்.

முருகதாசர், தமது ஆஸ்தான அறையின் சிம்மாசன மான பழைய கோரைப் பாயில் உட்கார்ந்துகொண்டு அந்த எட்டணாவைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டு, நீண்ட யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

''அங்கு என்ன செய்யறீங்க?'' என்றது மனைவியின் குரல்.

''நீதான் இங்கே வாயேன்!''

கமலம் உள்ளே வந்து, ''அப்பாடா'' என்று உட்கார்ந்தாள், அவர் கையில் இருக்கும் சில்லறையைப் பார்த்துவிட்டு, ''இதேது?'' என்றாள்.

''சுப்பிரமணியத்திடம் வாங்கினேன்!''

''உங்களுக்கும்... வேலையில்லையா?'' என்று முகத்தைச் சிணுங்கினாள் கமலம். பிறகு திடீரென்று எதையோ எண்ணிக்கொண்டு, ''ஆமாம், இப்பதான் நினைப்பு வந்தது. நாளைக்குக் காப்பிப் பொடி இல்லை. அதெ வச்சு வாங்கி வாருங்களேன்!'' என்றாள்.

''அந்தக் கடைக்காரனுக்காக அல்லவா வாங்கினேன்! அதைக் கொடுத்துவிட்டால்?''

''திங்கட்கிழமை கொடுப்பதாகத்தானே சொன்னீர்களாம்!''

''அதற்கென்ன இப்பொழுது?''

''போய்ச் சீக்கிரம் வாங்கி வாருங்கள்!''

''திங்கட்கிழமைக்கு?''

''திங்கட்கிழமை பார்த்துக்கொள்ளுகிறது!''



# கனகாம்பரம்

## கு. ப. ராஜகோபாலன்

''மணி'' என்று வாசலில் நின்றுகொண்டே ராமு கூப்பிட்டான். நண்பன் வீட்டில் இருக்கிறானோ இல்லையோ என்று அவனுக்குச் சந்தேகம்.

''எங்கேயோ வெளியே போயிருக்கா, நீங்க யாரு?'' என்று மணியின் மனைவி கதவண்டை நின்றுகொண்டு மெல்லிய குரலில் கேட்டாள்.

ராமுவுக்குக் கொஞ்சம் தூக்கி வாரிப் போட்டது. மணியும் அவனும் கலாசாலையில் சேர்ந்து படித்தவர்கள். மணியின் மனைவியைப்பற்றி அவனுக்கு அதிகமாகத் தெரியாது. அவளை அவன் அதுவரையில் பார்த்ததுகூட இல்லை. புதுக்குடித்தனம் நடத்த அவன் சென்னைக்கு வந்து ஒருமாதந்தான் ஆகியிருந்தது. அந்த மாதம் முழுவதும் ராமு சென்னையில் இல்லை. அதற்கு முன் சாரதாவும் அவனைப் பார்த்ததில்லை.

ராமுவும் மணியைப் போல மிகவும் முற்போக்கான கொள்கைகள் உடையவன் தான். கல்லூரி விவாதங்களில் பேசியபொழுது, ஆணும் பெண்ணும் சரிநிகராகப் பழக வேண்டுமென்றும் பெண்களின் முன்னேற்றம் மிகவும் அவசியமான சீர்திருத்தமென்றும் ஆவேசத்துடன் முழங்கி வந்தான். ஆனால் அந்தக் கொள்கைகளை நடைமுறையில் கொண்டுவந்தபொழுது அவன் கலவரம் அடைந்து விட்டான். முன்பின் பழக்கமின்றி மணியின் மனைவி தன்னுடன் பேசியது அவனுக்கு வியப்பாக இருந்தது. அவன் அதைச் சிறிதும் எதிர்பார்க்கவே இல்லை. 'வீட்டில் மணி இல்லாவிட்டால் பதில் வராது கொஞ்ச நேரம் நின்று பார்த்துவிட்டுப் போய்விடுவோம்' என்றே அவன் ஒரு குரல் கூப்பிட்டுப் பார்த்தான்.

மணியின் மனைவி சாரதா படித்த பெண்ணும் அல்ல; அசல் நாட்டுப்புறம். எந்தப் பக்கத்திலும் ரெயில் பாதைக்கே இருபது கல் தொலைவிலுள்ள சோழநாட்டுக் கிராமத்துப் பெரிய பண்ணையாரின் மகள் அவள். அவளுடைய நடை உடை பாவனைகளிலும், அந்தச் சில கணங்களில் அவன் கண்களில் பட்டமட்டில் ஒருவிதப் புதுமையும் காணவில்லை.

விலையுயர்ந்த பெங்களூர் பட்டுச் சேலையை நேர்த்தியாகக் கொசுவம் விட்டுக் கட்டிக்கொண்டிருந்தாள். அதற்கேற்ற நிறங்கொண்ட பழைய மாதிரி ரவிக்கையே அணிந்திருந்தாள். தலைமயிரை நடுவே வகிரெடுத்துத் தான் பின்னிக்கொண்டிருந்தாள். பின்னல் கூட நவநாகரிகப் போக்குப்படி 'தொளதொள, வென்று காதை மூடிக்கொண்டு இருக்கவில்லை பின்னலை எடுத்துக் கட்டிக்கொண்டிருந்தாள். நெற்றியில் முழு நிலவு போல பெரிய குங்குமப் பொட்டு இருந்தது. உடம்பின் மேலிருந்த வைரங்கள் பூத்துக் கொட்டிக்கொண்டிருந்தன. மூக்கில் புல்லாக்கு இருந்தது. கைக்காரியமாக இருந்தவள், அவசரமாக யாரென்று பார்த்துப் பதில் சொல்ல வந்தாள் என்பது அவளது தோற்றத்திலிருந்தே தெரிந்தது. அப்பேற்பட்டவள் தன்னுடன் வந்து பேசினதும் ராமு மனம் தடுமாறிப் போனான்.

ஒரு பெண் வந்து தன்னுடன் பேசிவிட்டாள் என்பதால் அவன் கூச்சமடையவில்லை. கல்லூரியிலும் வெளியிலும் படித்த பெண்கள் பலருடன் பேசிப் பழகினவன் தான் அவன். அது அவனுக்குப் பழக்கமாயிருந்தது. இந்தப் படிக்காத பெண் தன்னுடன் பேசினது தான் அவனுக்குக் குழப்பத்தை உண்டாக்கிவிட்டது! படித்த பெண்கள்கூடப் புது மனிதர்களிடம்பேசுவது எளிதல்லவே! அப்படியிருக்க, நவநாகரிக முறையில் ஆண்களுடன் பழகுவது என்பதே அறியாத இடத்தில் பிறந்து வளர்ந்த பெண் வேறு ஆடவனுடன் பேசுவதென்றால், அது ராமுவுக்கு விபரீதமாகப்பட்டது. ஆனால் அவள் பேசிய

சொற்கள் மெல்லிய தொனியுடன் தான் வெளிவந்தன. அவனது முகத்தைப் பார்த்துக்கூடப் பேசவில்லை. அவள் தலைகுனிந்த வண்ணமாகவே இருந்தாள். இருந்தாலும் அவன் மனம் என்னவோ சமாதானப்படவில்லை.

''நான் - நான் – மணியின் சிநேகிதன் –'' என்று சொல்லி மேலே என்ன சொல்லுவது என்பது தெரியாமல் தத்தளித்தான்.

''இதோ வந்துவிடுவார்!. உள்ளே வந்து உட்காருங் கள்'' என்றாள் சாரதா.

அதைக் கேட்டதும் உண்மையிலேயே ராமு திகைத்துப் போனான். தலை கிர்ரென்று சுற்றிற்று. ஏதோ தப்புச் செய்துவிட்டவன் போலச் சுற்று முற்றும் பார்த்தான். ஒரு சிறு தனி வீட்டில், தனியாக இருக்கும் இளம் பெண் தன்னை உள்ளே வந்து உட்காரச் சொன்னால்! – அவ னுக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

''இல்லை, அப்புறம் வருகிறேன்'' என்று அரை குறையாகக் கூறித் தலையெடுத்தும் பார்க்காமல் வெகு வேகமாய்ப் போய்விட்டான்.

ஐந்து நிமிடத்திற்கெல்லாம் இலையும் காய்கறியும் வாங்கிக்கொண்டு மணி உள்ளே நுழைந்தான்.

''உங்கள் சினேகிதராமே? – வந்து தேடினார்'' என்று சாரதா மகிழ்ச்சி பொங்கக் குதித்துக்கொண்டு அவனை எதிர்கொண்டு போய்ச் சொன்னாள். அவளது மேனியும் குரலும் ஒரு படையெடுப்புப்போல அப்பொழுது அவனைத் தாக்கின. மணி புதுக் குடித்தனத்தின் தொல் லைகளிலும் தன்னை வந்து தாக்கிய அந்த இன்ப அலையை அநுபவித்து ஆறுதல் அடைந்தான்.

''யார் அது?'' என்று அவளுடைய கன்னத்தைக் கிள்ளிக்கொண்டு கேட்டான்.

''யார் என்று கேட்கவில்லை'' என்று சொல்லிக்கொண்டு வலிகொண்டவள் போலப் பாசாங்கு செய்து ''ஆ'' என்றாள்.

திடீரென்று மணியின் முகம் சிவந்தது; கோபம் பொங்கி எழுந்தது.

''எவ்வளவுதரம் சொல்லுகிறது உனக்கு? யார் என்று கேட்பதற்கு என்ன கேடு உனக்கு? ஒரு வார்த்தை கேட்டுவிட்டால் என்ன மோசம்? உன் கையைப்பிடித்து இழுத்துவிடுவானோ'' என்று வார்த்தைகளை வீசினான்.

ஒரு வாரத்துக்கு முன்புதான் இப்படி ஒரு சம்பவம் நடந்தது. மணி சாரதாவைத் தாறுமாறாகக் கடிந்துகொண்டான். ''பட்டணத்தில் நண்பர்கள் அடிக்கடி வந்து தேடுவார்கள். பதில் சொல்லாமல் உள்ளே நுழைந்துகொண்டு கதவைச் சாத்திக்கொள்ளக் கூடாது; பட்டணத்தின் நாகரிகத்திற்கு ஏற்றபடி நடந்துகொள்ள வேண்டும்'' – இந்த மாதிரி உபதேசங்கள் செய்து முடித்தான். அதன் விளைவாக இருவரும் இரண்டு நாள் பேசாமல் கூட இருந்தார்கள்.

இந்தத்தடவை, தான் சொல்லப் போகிற பதில் மணிக்கு மிகவும் மகிழ்ச்சியை உண்டாக்கப் போகிறது என்ற நிச்சயமான எண்ணத்தில், ''வேண்டிய மட்டும் பேசட்டும்'' என்று சாரதா வாயை மூடிக்கொண்டிருந்தாள் பின்பு அவன் ஓய்ந்ததும் அமைதியாகப் பதில் சொன்னாள்.

''யார் என்று கேட்டேன். சினேகிதன் என்று சொன்னார். பேர் சொல்லவில்லை. 'உள்ளே வந்து உட்காருங்கள். வந்திடுவார்' என்றேன். அப்புறம் வருவதாகச் சொல்லிப் போய்விட்டார்.''

சாரதா ஆவலுடன் மணியின் முகத்தை நோக்கினாள். அதில் எவ்விதமான மகிழ்ச்சிக் குறியும் தோன்றாததைக் கண்டு அவளது முகம் சுண்டிப்போய்விட்டது. சடக்கென்று திரும்பி உள்ளே போய்விட்டாள்.

மணியோ அந்த மாதிரிப் பதிலை அவளிடமிருந்து எதிர் பார்க்கவே இல்லை. முதலில் அவனுக்கு முகத்தில் அடித் தாற்போல் இருந்தது அவள் பதில்; பிறகு தான் சொன்ன தற்கு மேலாக அவள் நடந்துகொண்டு விட்டது அவ னுக்கு அதிருப்தியை உண்டாக்கிற்று. அதன்பிறகு ஏன் அப்படிச் செய்தாள்? நாம் சொன்னதற்காகக் கீழ்ப்படிந்து நடந்த மாதிரியா அது? அல்லது என்று கொஞ்சம் அவன் மனம் தடுமாறலாயிற்று. எல்லாம் சேர்ந்து அவ னது வாயை அடக்கி விட்டன. சாரதாவும் அவனை அமைதிப்படுத்தவோ பேச்சில் இழுக்கவோ முயலவில்லை. அவளுக்கும் கோபம்.

சாப்பாடு முடிந்து வெளியே போகும் வரை மணி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. தெருவழியாகப் போய்க் கொண்டே என்ன என்னவோ எண்ணமிட்டான். அவனது மனம் சொல்ல முடியாத வேதனையை அடைந்தது. சாரதா இவ்வளவு தூரம் போய்விடுவாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. படித்த பெண் அம்மாதிரிச் செய் திருந்தால் அதில் ஒன்றும் குறிப்பிடக்கூடியபடி இராது. ஒரு நாட்டுப்புறப் பெண் முகம் தெரியாதவனை உள்ளே வந்து உட்காரச் சொன்னது மிகவும் அநாகரிகம்! சிநே கிதன் என்ன நினைத்திருப்பான்? ''என்ன தைரியம் இந்தப் பெண்ணிற்கு?'' என்றோ அல்லது 'வெறும் அசடு' என்றோ நினைத்திருப்பான். அல்லது.......

இம்மாதிரி யோசித்துக்கொண்டே போய்க்கொண்டிருந் தான் மணி.

எங்கேயோ போய்விட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்த ராமு, தெருவில் மணி எதிரே வருவதைக் கண்டு தயக்க முற்றான். அப்பொழுது மணியைக்கண்டு பேசுவதா வேண்டாமா என்றுகூட அவனுக்குச் சந்தேகம் வந்துவிட் டது. வீட்டுக்கு வந்திருந்ததாகச் சொல்வதா வேண் டாமா? மணியின் மனைவி சொன்னதைச் சொல்வதா

வேண்டாமா? இத்தகைய கேள்விகள் அவனது மனத்தில் எழுந்தன. ஒருவேளை மணியின் அனுமதியின் பேரில் அவள் அப்படிப் பேசியிருந்தால் சரியாய்ப் போய்விடும். இல்லாவிட்டால் தான் சொல்லுவதால் அந்தப் பெண்ணின் அசட்டுத்தனமோ, அறியாமையோ மணிக்குக் கோபத்தை உண்டாக்கினால்? அவர்களிடையே பெருத்த மனத்தாங்கல் ஏற்பட்டால்? யார் கண்டார்கள்? மனித சுபாவம் எது வேண்டுமானாலும் நினைக்கும். அந்த மாதிரி மனக் கசப்பு நேருவதற்குத் தான் காரணமாகக் கூடாது. அவள் தானாக மணியிடம் முழுவதும் சொல்லியிருக்கிறாள் என்பது என்ன நிச்சயம்? சொல்லியிராவிட்டால் அசட்டுத் தனம் ஆபத்தாக அல்லவோ முடியும்?

இவ்விதம் எண்ணியவனாய், ராமு சடக்கென்று ஒரு சந்தில் திரும்பி மணியின் கண்ணில் படாமல் தப்பினான். ஆனால் அன்று காலையில் நடந்ததைத் தன் மனத்தை விட்டு அகற்ற அவனால் முடியவில்லை. அந்தப் பால்வடியும் புது முகத்தின் களங்கமற்ற பார்வை; தடங்கல், திகைப்பு, பயம் இவையற்ற அந்தத் தெளிவான சொற்கள்! ''இதோ வந்துவிடுவார்!'' என்றாள் அவள். 'அதில் என்ன நேர்மை! என்ன மரியாதை! இன்னும் தன்னை உள்ளே வரும்படி அழைத்ததில் என்ன நம்பிக்கை! - தன் கணவனின் நண்பன் என்றதால் ஏற்பட்டது. தன்னையும் நம்பினாள்.... அவளா அசடு? அவள் தான் உண்மையான பெண்! நான் சந்தித்த முதல் பெண்! அதனால்தான் எனக்கு அந்தக் கலவரம் ஏற்பட்டது. மணியை மாலையில் கண்டு அவனிடம் சொல்ல வேண்டும். இப்படி எண்ணிக்கொண்டு ராமு நடந்தான். ஆனால் தான் முதலில் அந்தப் பேச்சை எடுப்பதற்கு முன்பு, நிலைமை எவ்வாறு இருக்கிறது என்று அறிந்துகொள்ள வேண்டுமென்று தீர்மானித்தான். மாலை ஏழு மணிக்குச் சென்றால் மணி நிச்சயம் வீட்டில் இருப்பான் என்று எண்ணினான் ராமு.

மாலை ஆறு மணி இருக்கும். சாரதா வீட்டு வேலைகளைச் செய்து முடித்துவிட்டு அறையில் தலையை வாரிப் பின்னிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். பக்கத்தில் ஒரு தட்டில் தொடுக்கப்படாத கனகாம்பர மலர்கள், எதிரே முகம் பார்க்கும் கண்ணாடி, ரிப்பன், சீப்பு, வாசனைத் தைலம் முதலியவை இருந்தன.

உள்ளே நுழைந்த மணிக்கு இவற்றையெல்லாம் பார்த்ததும் ஏதோ ஓர் ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது.

''இது என்ன பூவென்று இதை நித்தியம் வாங்கித் தலையில் வைத்துக்கொள்ளுகிறாய்?'' என்று அவன் அவலை நினைத்துக்கொண்டு உரலை இடித்தான்

ஆனால், கனகாம்பரத்தைத்தான் அவன் சொல்லுகிறான் என்று நினைத்துச் சாரதா, அந்தச் சந்தர்ப்பத்தில் அவனது பட்டணத்து நாகரிகத்தை இடித்துக் காட்ட வேண்டுமென்று தீர்மானித்தாள்.

''பட்டணத்திலே எல்லோரும் இதைத்தானே வைத்துக்கொள்கிறார்கள்? சங்கீத சபையிலே கூட இதைத்தானே தலை தாங்காமல் வைத்துக்கொண்டு வந்தார்கள்'' என்று சாரதா சொன்னாள்.

''எல்லாம் பட்டணத்திலே செய்வதுபோலச் செய்ய வேண்டுமென்று யார் சொன்னது? அப்பிடிக் கட்டாயமா? பட்டணத்துப் பெண்கள் மாதிரித்தான் இருக்கிறது. அவர்கள் வைத்துக்கொள்ளுகிற கனகாம்பரமும், வாசனையில்லாத பூவை எங்கேயாவது தலையில் வைத்துக்கொள்வதுண்டோ? காக்கரட்டான் பூவைத் தலையில் வைத்துக்கொள்கிற பெண்களுடைய வாழ்க்கைப் போக்கும் அப்படித்தான் இருக்கும்.''

''நீங்கள் தானே. நான் பட்டணத்துப் பெண்போல இருக்க வேண்டும் என்கிறீர்கள்? இல்லாவிட்டால்

உங்களுக்கு வெட்கமாக இருக்கும் என்றீர்களே?'' என்று சாரதா, மணியின் முகக் குறியை ஊன்றிக் கவனித்துக் கொண்டு கூறினாள்.

''அதற்காக மூன்றாம் பேர் வழியைப் போய் வீட்டுக் குள்ளே வந்து உட்காருங்கள் என்பதா?'' என்று மணி ஆத்திரத்தில் கொட்டிவிட்டான்.

சாரதாவின் முகம் சட்டென்று மாறுதல் அடைந்தது. என்ன நாட்டுப்புறமானாலும் அவள் பெண்; அளவு கடந்த கோபத்துடன் மணியின் முகத்தை ஒருநிமிடம் ஏறிட்டுப் பார்த்தாள். அவனுடைய எண்ணங்கள் அவனது முகத்தில் அவளுக்குத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்தன. தனக்கு — தன் பெண்மைக்கு அவன் செய்த அவமதிப்பை அறிந்த வள் போல் அவளுடைய முகத்தில் ஓர் ஆழ்ந்த வெறுப்புக் குறி தோன்றிற்று. பாதி போட்ட பின்னலை அவிழ்த்து முடிந்துகொண்டு கனகாம்பரப் பூவைத் தட்டுடன் அப்ப டியே எடுத்து அலுமாரியில் வைத்துவிட்டுச் சமையலறைக் குப் போய்விட்டாள்.

மணி அயர்ந்து போனான்! அடிபட்ட நாய் போல மவுனமாக அறைக்குப் போய் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஒரு புத்தகத்தைப் படிப்பதாகப் பாசாங்கு செய்தான்.

ஏழு அடிக்கும் சமயத்தில் ராமு வந்தான். மணி கல கலப்புடன் பேச முயற்சி செய்தும் பயன்படவில்லை. வந் ததும் வராததுமாய் ராமு, ''மணி, நான் காலையில் வந்திருந்தேன். நீ எங்கே போயிருந்தாய்?'' என்றான்.

''நீயா வந்திருந்தாய்?'' என்று கேட்டுவிட்டு மணி மவுனத்தில் ஆழ்ந்தான்.

''மணி, எனக்கு ஏற்பட்ட வியப்பில் என் பெயரைக் கூடச் சொல்ல மறந்து போனேன்.''

ராமுவின் தொண்டை அடைபட்டது. மணி தலை குனிந்துகொண்டான்; அவனால் பேச முடியவில்லை. நண்பர்கள் இருவரும் சில நிமிட நேரம் மவுனமாக உட்கார்ந்திருந்தார்கள். ராமு நிலைமையை உணர்ந்து விட்டான். திடீரென்று எழுந்தான்.

''மணி, நான் போய்விட்டு வருகிறேன், இதைச் சொல்லத்தான் வந்தேன்.''

''இங்கேயே சாப்பிடேன், ராமு?''

''இல்லை, இன்று வேண்டாம்!''

இரவுச் சாப்பாடு பேச்சில்லாமல் முடிந்தது. ஜன்னல் வழியே பாய்ந்த நிலவைக் கவனிப்பது போல மணி ஏங்கிப் போய் உட்கார்ந்து கொண்டிருந்தான். சாரதா பால் கிண்ணத்தை எடுத்துவந்து மவுனமாக நீட்டினாள்.

அதுவரையில் அவளுடைய முகத்தைப் பார்க்கக்கூட அவனுக்குத் துணிவு வரவில்லை. அப்பொழுதுதான் தலையெடுத்துப் பார்த்தான். அவளது முகத்தில் தோன்றிய துயரக்குறியைக் கண்டு பதறிப்போனான்; எழுந்து அவளது தோளைப் பிடித்துக்கொண்டான்.

''சாரதா !'' என்று சொல்லி மேலே பேச முடியாமல் நிறுத்தினான்.

''வேண்டாம்!'' என்று சாரதா அவனது முகத்தைத் தடவினாள்.

''நான் சொன்னது!'' என்று மணி தன் மனத்தை வெளியிடலானான்.

''கனகாம்பரம் எனக்குப் பிடிக்காதே! நீங்கள் சொன்னதில் தப்பென்ன?'' என்று சாரதா பெண்களுக்கென்றே அமைந்த முறையில் பேச்சை மாற்றி விட்டாள்.



# தவப் பயன்

## கு. அழகிரிசாமி

சுவாமி நிர்மலானந்தரை ஒருநாள் மாலை திடீரென்று ஆஸ்ரமத்தில் காணவில்லை சாயங்காலம் ஐந்து மணிக் கெல்லாம் அவர் தனியே எழுந்து உலாவப் போவது வழக்கம். அப்போது சீடர்கள் எவரையும் அழைத்துக் கொள்ளாமல், தியானத்தில் ஆழ்ந்தவண்ணம் தன்னந்தனி யாகவே நடந்து செல்லுவார். அநேகமாக பொழுது இருட்டுவதற்குள் சுவாமிகள் ஆஸ்ரமத்திற்குத் திரும்பி விடு வார். திரும்பும்போது மட்டிலும் சிஷ்யர்கள் சிறிது தூரம் சென்று அவரை எதிர்கொண்டு அழைத்து வருவார்கள்.

அன்று நிர்மலானந்தர் சூரியாஸ்தமனம் ஆகி இரண்டு நாழிகைப் பொழுது கழிந்தும் வராததைக் கண்டு சிஷ்யர் கள் திடுக்கிட்டுப் போனார்கள். சுவாமிகளிடம் ஞானோப தேசம் பெறும் உயர்ந்த நோக்கத்துடன் சிலரும், திரு நீறும் ஆசீர்வாதமும் பெறும் சாதாரண நோக்கத்துடன் சிலருமாக ஒரு சிறு கூட்டம் வழக்கம்போல வந்து ஆஸ்ர மத்தில் அமர்ந்திருந்தது; காத்திருந்தது.

சுவாமிகளை இன்னும் காணவில்லை.

சிஷ்யர்களைவிட பக்தகோடிகள் மிகவும் அதிகக் கவலையில் ஆழ்ந்தனர்.

சிஷ்யர்களுக்கு ஓரளவு துணிச்சல் இருப்பதற்குச் சில காரணங்கள் உண்டு.

சில சமயங்களில் நிர்மலானந்தர் உலாவப் போகும் நோக்கத்துடன் ஆஸ்ரமத்தை விட்டுப் புறப்படுவார். ஆனால், ஆஸ்ரமத்தின் வேலியைத் தாண்டியதும் வெட்ட வெளியில் அப்படியே உட்கார்ந்துவிடுவார். உடனே பக

வத்தியானம்தான். அன்று அவ்வளவோடு உலாவும் காரியம் முடிந்துவிடும். தியானம் கலைந்ததும் நேரத்தைப் பார்த்துக்கொண்டு ஆஸ்ரமத்துக்குத் திரும்பி விடுவார். இதற்கு விதிவிலக்காகத் தியானம் கலையும்போது நள்ளிரவு ஆகிவிட்டிருந்தாலும், மேற்கொண்டும் சாயங்காலத்தைப் போலவே பாவித்து, அந்தக் காடாந்தகாரமான நிசியிலும் உலாவப் போய் வருவது உண்டு.

அன்று அவர் திருவுள்ளம் எப்படி இருந்ததோ? அவரைக் கருவியாகக்கொண்டு ஆட்டுவிப்பவனின் திருவுள்ளப் பாங்கு எதுவோ? அவர் அன்று எங்கே, எந்த நிலையில், எதற்காகத் தாமதித்தாரோ?

சமீபத்தில் எங்காவது இருப்பார் என்ற நம்பிக்கையும் நேரம் செல்லச் செல்ல சிஷ்யர்களுக்குக் குறைந்துவிட்டது.

பக்தர்களின் மன வியாகூலமே சிஷ்யர்களை அமைதியுடன் அமர்ந்து காத்திருக்கும்படி விடவில்லை.

மூவர் – சிஷ்யர்கள் – புறப்பட்டார்கள். பக்தகோடிகளில் வயதான கிழவர் ஒருவரும் கூடப்புறப்பட்டார்.

நல்ல நிலா அடித்தது.

பொட்டல் வெளியில் சுவடுகள் பதியாவிட்டாலும், நிர்மலானந்தர் எந்த வழியில் சென்றிருப்பார் என்பதைக் கண்டுபிடிப்பது சிரமம் அல்ல. ஏனென்றால் ஆஸ்ரமத்திலிருந்து தெற்கு நோக்கிச் செல்லும் ஒற்றையடிப் பாதைதான் பரந்த வெளியை நோக்கிச் செல்லும் பாதை. வடக்குப்பாதை ஊரை நோக்கிச் செல்கிறது. வேறு பாதைகள் கிடையாது.

நான்கு பேரும் நடந்தனர். சமீபத்தில் எங்காவது நிர்மலானந்தர் அமர்ந்திருக்கக்கூடும் என்ற எண்ணத்தி

னால் கால்நடையில் பயபக்தி தயக்கம் கொடுத்தது. சுற்றிலும் இரையும் சில்வண்டுகளின் ஓசையை நூலளவும் பாதிக்காதவாறு மௌனமாக, காலடி ஓசை கேட்காமல் பாதங்கள் அடி எடுத்து வைத்தன.

இப்படி ஒரு மைல் நடந்தார்கள்.

ஒரு மைலுக்கு மேலும் நடந்தாய் விட்டது.

பாதையின் வலது புறத்தில் சப்பாத்திக்கள்ளிப் புதரின் நடுவில் சிறிது மேடான ஒரு கரும்பாறை உண்டு. அது நிலவில், குழியில் விழுந்த யானையின் முதுகு போலத் தோற்றமளித்தது. அதன் மேல் கரும்பரப்பை வகிர்ந்து கொண்டு செந்நிறத் தூலமாக ஏதோ கிடந்தது.

பரபரப்புடன் மனம் கலங்கி நால்வரும் அந்தப் பாறையை நோக்கி ஓடினார்கள். அவர்களில் ஏழை மனம் படைத்த ஒரு சிஷ்யனின் கண்களில் கண்ணீர் திரண்டது. உடன் சென்ற கிழவரின் இரைகின்ற சுவாசம் அந்த இடத்தில் மட்டுப்பட்டு மௌனம் பூண்டது. நால்வரும் போய்ப் பார்த்தார்கள்.

காஷாயதாரியான கருங்கல் சயனத்தில் கிடந்த நிர்மலானந்தர் 'பூரணம்' பெற்று விடவில்லை. அன்றைய த் தியானம் சயன அவசத்தில் நடைபெற்றது. அவ்வளவே தான். எதிர்பார்த்தபடி, சிஷ்யர்கள் பயப்படும்படியாக எதுவும் நடந்துவிடவில்லை. ஆனால்...

தன்னை மறந்து படுத்திருக்கும் நிர்மலானந்தரின் வாயிலும், வாயருகில் பாறையிலும், காய்ந்து சருகாகிப் போன பெயர் தெரியாத இலைகள் ஏதோ கிடந்தன. சப்பாத்திக் கள்ளியின் காய்கள் சில பக்கத்தில் இருந்தன. சுவாமிகளின் ஒரு கால் பாறையிலும், மற்றொரு கால் சப்பாத்திப் புதரிலும் கிடந்தது. இடையில் சுற்றியிருந்த

காஷாயத் துணியின் செம்பாதி காற்றில் பறந்துபோய் சப்பாத்தியின் மேல் ஒட்டிக்கொண்டிருந்தது.

நால்வருக்கும் நிஷ்டையைக் கலைக்கப்பயம். ஆனால் சுவாமிகளின் பரிதாப நிலையைக்கண்டு சொல்லொணாத மனவேதனை.

அந்தப் பாறையின் சரிவான ஒரு பகுதியில், சுவாமி களின் ஸ்தானத்துக்குச் சற்று இறக்கமாக, மரியாதை யுடன் உட்கார்ந்து ஈஸ்வரத் தியானத்தில் ஆழ்ந்துவிட்டார் கள். உண்மையில் அது தியானம் அன்று; மௌனமான பிரார்த்தனையே.

எவ்வளவு நேரம் சென்றதோ?

சற்றே அபூரணம் பெற்ற அன்றைய நிலா, உச்சி வானத்தின் மைய விளிம்பைத் தொட்டதுபோல மேலேறி வந்துவிட்டது.

சுவாமிகளின் சரீரம் சிறிது அசைந்தது. அசைந்த தெல்லாம் இவ்வளவே; பாறையில் கிடந்த மற்றொரு காலையும் எடுத்து சப்பாத்தியின் மேல் போட்டார். தாங்க முடியாத சுமை கீழே விழுந்தது போல, கால் 'தொப்' பென்று சப்பாத்தியில் விழுந்தது. எத்தனை முட்கள் அந்த மிருதுவான கால்களில் குத்தினவோ என்று கவலைப் படத் தொடங்கு முன்பே, நல்ல பாம்பு ஒன்று சப்பாத்திப் புதரிலிருந்து திடீரென்று சீறி எழுந்து, தன் படத்தை அகல விரித்து, தலையைச் சாய்த்த வண்ணம் மிகவும் பல மாக சுவாமிகளின் இடது பாதத்தில் மோதிக் கடித்து விட்டது. பாம்புக் கடியினால் சுவாமிகளின் மேனியில் சிறிதாவது சலனம் ஏற்பட்டுமே!

சிஷ்யர்களின் ரத்தம் உறைந்துவிட்டது. அடுத்த வனைப் பாம்பு படம் விரித்துக் கடிப்பதை மனித வர்க்கமே கண்ணாரக் காண்பது, அதுதான் முதல் தடவையோ

என்று கருதக்கூடியவாறு அவ்வளவு பிரத்யக்ஷ நிலையில் நடந்தேறிய இந்த அபாயத்தைக் கண்டு எழுந்து ஓடிய அந் நால்வரும் சப்பாத்தியிலேயே மிதித்தார்கள். ஒவ்வொரு முள்ளும் ஒரு விசப் பல்லாகக் குத்தியது. ஆனால் பாம்பு இவர்களை நோக்கி வரவில்லை. வேறு திசையில் நெளிந்துவிட்டது. பாறையின் மேல் மின்னி நெளிந்த அதன் சரீரம், பாறையில் ஏதோ விஷ ஊற்றுக் கிளம்பி வடிந்தது போல் இருந்தது.

இனி சுவாமிகளை எழுப்பாமல் இருந்தால் மரியாதைக்கு அர்த்தம் கிடையாது. பூவைப்போலத் தொடுவது போல், தரையில் புதைந்த ஆணி வேரைப் பிடுங்குவது போல் அவ்வளவு முரட்டுத்தனமாக சுவாமிகளைத் தூக்கி உட்கார வைத்தனர்.

நிர்மலானந்தர் எழுந்து அமர்ந்தார். அவருடைய விழிகள் மலர்ந்தன. வாயிலிருந்த சருகுகளைத் துப்பினார். துப்பும்போது, பாதி மென்ற கள்ளிப்பழம் ஒன்று முறிந்த முள்ளுடன் பாறையில் விழுந்தது,

''இதுவா ஆகாரம்?'' என்று பிரமித்தார் உடன் சென்ற கிழவர்.

நிர்மலானந்தரின் ஆகாரம் எதுவென்று அவருக்கு இவ்வளவு காலத்துக்குப் பின் அன்றுதான் தெரிய வந்தது. காரணம் கிழவர் ஊருக்குப் புதிது.

''தங்களை விஷம் தீண்டி விட்டது'' என்று சொன்னான் ஒரு சிஷ்யன், வாயை ஒரு கையால் மூடிக்கொண்டே.

மற்ற இருவரும், இரண்டு கால்களிலும் உள்ள சப்பாத்தி முட்களைத் தடவித் தடவிப் பிடுங்கினார்கள். அவர்களுடைய கைகளில், முள் தைத்த புண்களில் கசிந்த ரத்தம் படிந்து படிந்து, மருதாணியிட்டது போல மாறி விட்டது.

''முட்களா? அவற்றை ஏன் பிடுங்க வேண்டும்'' என்று சாவதானமாகச் சொல்லிவிட்டு, ''எப்போது பாம்பு கடித்தது?'' என்று கேட்டார் சுவாமிகள்.

கிழவர் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்துவிட்டார்.

நடந்த விருத்தாந்தத்தைச் சுருக்கமாகச் சொல்லி முடிக்கு முன்பே, நிர்மலானந்தர் ''பாரம் தாங்க முடிய வில்லை; படுக்க வேண்டும்'' என்று பாறையில் சாய்ந்தார்.

பாம்பு கடித்ததன் விளைவாக நிர்மலானந்தர் மயக்கம் எய்தி, பிதற்றுகிறாரென்றே நால்வரும் நினைத்தனர். விஷம் தலைக்கேறிக்கொண்டிருக்கிறது என்பது உண்மை தான் என்றாலும், பாரம் விஷத்தினால் வந்ததல்ல; மாமிச பிண்டத்தைத் தூக்கிச் சுமப்பது நிர்மலானந்தர் நெடுநாளாக அனுபவித்து வரும் வேதனை: அன்று சுமக்கவே முடியாமல் போனதனால்தான் பாறையில் போய்ப் படுத்துவிட்டார்.

பின்னும் காலதாமதம் கூடாது என்று, நிர்மலானந்தரை மூவரும் எடுத்துச் சுமந்து ஆஸ்ரமத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். தாம் நடக்கவே சிரமப்படும் கிழவர் பரிவோடு ஒரு கையினால், நிர்மலானந்தரின் சரீரத்லதைச் சுமக்க முடியாவிட்டாலும், தொட்டுக்கொண்டு தள்ளாடி நடந்து வந்தார்.

பாதி வழி தாண்டுமுன்பே, சுவாமிகளின் உதடுகள் ஒரு பக்கம் கோணித் திறந்தன. வாயில் கொப்பளித்த நுரை சிலந்திப் பூச்சியின் நூல்களைப் போலக் காற்றில் ஆடி அறுந்தன. நிர்மலானந்தரின் மண்ணுலகத் தொடர்பு நுரை நூலைக் காட்டிலும் இலகுவாக அவ்வளவு அரவம் அற்று அறுபட்டது. நிர்மலானந்தர் தம் வாழ்நாளெல்லாம் சுமந்த பாரத்தைத் தம் சிஷ்யர்களின் தோளிலும் தலையிலும் இறக்கி வைத்துவிட்டுப் போய்விட்டார்.

உபதேசத்துக்காகவும், ஆசீர்வாதத்துக்காகவும் வந்த ஜனங்களின் முன் நிர்மலானந்தரின் சரீரத்தைக் கொண்டு வந்து சேர்த்தார்கள் சிஷ்யர்களும் கிழவரும்.

மறுநாள் ஆஸ்ரமம் கல்லறையாக மாறியது.



மட்பாண்ட ஓடு உடைந்துவிட்டது. மாயக் குயவர் அந்த ஒட்டைச் சமைத்து அதன் உள்ளே வைத்து அனுப்பிய ஆத்ம அமிர்தம் திவலைகூட மண்ணுலகக் குழப்பத்தில் சிந்தாமல் சிதறாமல், கொடுத்தாலும் குறைவுபடாத நித்யபூரண வஸ்துவாய், குயவரிடமே திரும்பியது. அமிர்தம் ஆகவேண்டிய காலம் ஆகி நன்கு பண்பட்டு, சுவையோடும் திண்மையோடும் சுவர்க்கம் புகுந்தது.

நிர்மலானந்தர் மறைந்தார்: நிர்மலானந்தம் எஞ்சியது.

எண்ணற்ற முனிவர்களின், புண்ணிய புருஷர்களின், ஆன்ம சொரூபங்கள் இன்பத்தின் பரவெளியில், அமர போகம் துய்த்துக்கொண்டிருக்கும் அந்தத் தெய்வ மண்டலத்தில் நிர்மலானந்தருக்கு மரியாதை மிகுந்த பீடம் கிடைத்தது. என்றுமாய், எதுவுமாய், காலமும் தூரமும் அற்றிருக்கும் இந்தச் சுவர்க்க போகம் அல்ல நிர்மலானந்தருடைய நித்ய தபசின் கோரிக்கை. மண்ணுலகத்தைத் துறந்த இதயம், விண்ணுலகத்தில் அதைப் பெற்று அனுபவிக்க விரும்பவில்லை.

இன்னும் 'நான்' நசியவில்லை; 'அவன்' இன்னும் அவனாகத்தான் இருக்கிறான். 'அவன்', 'நான்' ஆகவில்லை; 'நான்', 'அவன்' ஆகவில்லை கேவலம் தூல சரீரத்தைக் களைந்துவிட்டால் ஈஸ்வர ஐக்கியம் கிட்டிவிடுமா?

இன்னும் எத்தனை வருஷங்கள், எத்தனை வியாழ வட்டங்கள் தபசிருக்க வேண்டுமோ, அந்த அத்வைத

நிலையைப் பெறுவதற்கு? நல்லவேளையாக இங்குக் காலம் என்ற பிரக்ஞை இல்லை. ஆனாலும் சுவர்க்கத்தின் போக நிலத்தில், புழுவெனத் துடித்து உபசாந்தப் பரவெளியை நோக்கித் துள்ளித் துள்ளிக் குதித்துக்கொண்டிருந்தது நிர்மலானந்தரின் ஜீவான்மா.

பரமான்மா வந்தது; பூலோகப் பஞ்சாங்கப்படி. நிர்மலானந்தரின் ஆன்மா சுவர்க்கத்திற்குப்போன பதினைந்தாம் நாளில் கடவுள் அந்தப் புதிய விருந்தைக் காண வந்தார். மோனப் பிரார்த்தனை அன்றே கடவுளுக்கு எட்டியது என்றாலும், சுவர்க்கானுபவச் சதுரங்கத்தில் நிர்மலானந்தரின் ஆத்ம விளையாட்டு வெற்றி பெறுகிறதா, தோற்கிறதா என்று பரிசோதனை செய்யத் தொடங்கியதுதான் இந்தப் பதினைந்து நாள் தாமதத்துக்குக் காரணம்.

பதினைந்து நாட்களுக்குப் பின் நிர்மலானந்தரின் முன் பிரசன்னமானார் கடவுள். வாழ்நாளெல்லாம் தபசில் கழித்த தம் பக்த சிரோன்மணிக்கு இந்தப் பதினைந்து நாளைய அனுபவம் எவ்வளவு பெரிய சுகத்தை அள்ளிக் கொடுத்திருக்கும் என்று எண்ணி ஆனந்த பரவசத்துடன் பக்தனைக் காண வந்தார். மறுதினந்தான் நிர்மலானந்தரின் கடைசித் தளையை, எஞ்சியிருக்கும் 'நான்' என்ற பிரக்ஞையை, சுட்டறுப்பது என்பது தெய்வத் திருவுள்ளம்.

தெய்வ விஜயம், பிரக்ஞையைப் போன்ற ஒரு சங்கேதத்தின் மூலம் நிர்மலானந்தருக்குத் தெரிந்தது. இறைவனின் பாதத்தில் மலர்ப்பலி இடுவதைப்போல தம் ஆத்மாவைப் பரிபூரணமாகச் சமர்ப்பித்தார் நிர்மலானந்தர்.

''சுவர்க்கம் பிடிக்கவில்லைப் போலும்! உம் கோரிக்கையை அறிந்தோம். உம் ஆத்மத் தேட்டம் விரைவில் சித்தி பெறும்'' என்றார் கடவுள்,

கடவுளின் வார்த்தைகளை எல்லாம் கிரஹித்துக் கொண்டாலும், சுவர்க்கம் என்ற பதம் நிர்மலானந்தரைப் பிரமிக்கச் செய்து விட்டது.

'சுவர்க்கம்!... சுவர்க்கம் என்றால்... அப்படியானால் தற்போதைய வாசஸ்தலம் சுவர்க்கம்தானா?' என்ற திகைப்பு நிர்மலானந்தரை ஊமையாக்கிவிட்டது. எழு தாக்கிளவிக்கு நாயகனாக இலங்குபவனுக்குப் பேசாத சிந்தை, தாய்மொழியைப் போலப் பரிச்சயப்பட்ட வஸ்து நிர்மலானந்தரின் திகைப்பு அவருக்குப் புரிந்தது.

''சுவர்க்கம் இல்லாமல் வேறு என்ன? நரகம் என்று நினைத்தீரா?''

கடவுள் சிரித்தார்!

''எதுவும் நினைக்கவில்லை. சுவர்க்கத்திற்கும் நரகத் திற்கும் பேதம் காணும் அந்தச் சரீர பரிசோதகன் என்றோ சாம்பலாகிவிட்டான் என்பது நாங்கள் அறியாதது அல் லவே? மண்ணுலகிலும் கூட, மலருக்கும் முள்ளுக்கும் மலருக்கும் விஷப்பல்லுக்கும் வேற்றுமை கண்டறியாதிருந்த ஜீவன் இப்போது ஐம்பொறிக்கூட்டை உதறிவிட்ட பிறகு, சுவர்க்கத்தை எங்ஙனம் உணரும்? நரகத்தை உணர்வதும் எங்ஙனம்?''

  

மாயக் குயவர் எத்தனையோ லட்சோபலட்சம் மண் பாண்டங்களை வனைந்து கொண்டிருக்கிறார். அவற்றில் எத்தனை பங்கப்படாமல் விதித்திருக்கும் காலவரையறை வந்து சந்திக்கும் வரையிலும் பயன்பட்டு, விளைபயன்களை விண்ணுக்கு அனுப்புமோ? எத்தனை மண்பாண்டங்கள், கூத்தாடிக் கூத்தாடி தம்மையே உடைத்துப் பாழாக்கிக் கொள்ளுமோ? மண்பாண்டங்கள். பற்பல உருவில், பற்பல வர்ணங்களில் தயாராகிக் குவிந்திருக்கின்றன.

குயவர் ஒரு சிறு பாண்டத்தை உருவாக்க முயன்று கொண்டிருக்கிறார். அது பூவுலகில் ராஜ்குமாரனாக வந்து பிறக்குமோ, ஒரு முனிவனாக வந்து அவதரிக்குமோ தெரியவில்லை. ஆனால் பாண்டம் உருப்பெறாமல் குலைந்து சரிந்து கொண்டிருந்தது. வேறு பல கலவை களைச் சேர்த்துக் குழைத்துப் பாண்டத்தை உருவாக்க முயன்றார் குயவர். பழையபடியும் அது கருவிலேயே சிதை வுற்றது. மற்றும் பல கலவைகளைக் கலந்து திரும்பவும்...

கடவுள் நையாண்டிச் சிரிப்புச் சிரித்தார்.

''மாயக் குயவரே! பாண்டத்தின் உருவ அமைப்பைச் சிதையாமல் நிறுத்தி வைக்கும் பிரதானமான கலவை என் அடைக்கலத்தில் உள்ளது.''

கை சோர்ந்துபோய் வணக்கத்துடன் திரும்பிப் பார்த் தார் மாயக்குயவர்.

''ஜீவான்மா ஒன்று மண்ணுலகிலிருந்து விடுதலை பெற்றுத் துறக்கம் பெற்றது. பிரம்ம ஐக்கியம், இரண்டறக் கலக்கும் அத்வைதநிலை – இதுதான் அதன் இன்றைய கோரிக்கை. அந்த ஆன்மாவும், அதன் கோரிக்கையும் அந்தரத்தில் நிற்கும்போது பாண்டத்தை உருவாக்குவது எப்படி?''

மௌனமாக இருந்தார் மாயக் குயவர்.

மண்ணுலகில் அது மலருக்கும் முள்ளுக்கும் பேதம் காணவில்லை; புலன்களைச் சுட்டறுக்கும் தபசை மேற் கொண்டு விட்டது. சுவர்க்கம் எய்தியது.

சுவர்க்கத்தின் தன்மை அந்த ஜீவனைத் தீண்டக்கூட இல்லை. சுவர்க்கத்தில் இருக்கிற பிரக்ஞையாவது இருக் கட்டுமே! இன்று அதை நரகத்திற்கு அனுப்பினாலும் இன்றைய நிலையை இழக்காத பக்குவத்துடன் அது இருக் கிறது.

அது வேண்டுவது பிரம்ம ஐக்கியம்; பரமாத்ம ஜீவாத்ம சங்கமம். அது கிட்டினால் அந்த ஆத்மா மாறுதல் பெற்று

விடுமா? இன்ப துன்பத்தை உணராத பேரின்ப உபாசகனாக இருந்த அந்த ஆன்மா எம்மோடு அத்வைத நிலையில் இருந்தால் என்ன? ஆஸ்ரமத்தில் சந்நியாசியாக இருந்தால் என்ன? இரண்டும் ஒன்றுதான்.

இன்ப துன்பத்தை உணராத தபசென்றாலும் கூட இந்தத் தபசு பயங்கரத் தபசு. சுவர்க்க, நரக பேதங்களையும், அத்வைத வெளியையும், ஆஸ்ரம வெளியையும் ஒன்றாக்கும் படியான இந்தப் பயங்கரத்தபசு சுவர்க்கத்திலும் சுகம் காணவில்லை; பரப்பிரம்மத்திலும் சுகம் காணப்போவதில்லை. மரத்துப்போனது, செத்தது, எங்கே கிடந்தால் என்ன? முக்தியும், முதல்வனும் சாலையோரச் சத்திரங்களாகிவிட்டன; லட்சிய ஸ்தானங்களாக இல்லை. அந்த ஆத்மாவுக்கு இனி எந்த வழியைக் காண்பிப்பது?

தபசிற்குப் பலனாக, சுகமான வாழ்க்கையை உணர்ந்து துய்க்கும் ஒரு பிறப்பை பழைபபடியும் அதே பூலோக வாழ்க்கையை, அதற்குச் சுட்டிக்காட்டுவதை விடச் சிறந்த பிரதி உபகாரம் வேறு எதுவும் இல்லை. அதற்குச் செய்யும் பேருதவியும், பரிகாரமும், பிராயச்சித்தமும் அதுவே.

நிர்மலானந்த சுவாமிகள் காலமான பதினாறாம் நாளில், ஆஸ்ரமத் தோட்டத்தின் நடுவில் சிவலிங்கம் வைத்துக் கட்டப்பட்டு இன்னும் ஈரம் உலராது இருக்கும் அவருடைய சிமிண்ட் சமாதியின் தென்புறத்தில் அன்றுதான் பிறந்த ஓர் அணில் குஞ்சு, மண்ணுலகை முதல் முதலாக ஸ்பரிசித்துக் கொண்டிருந்தது. அதன் மேல் படும் காலை இள வெய்யில் அதற்குச் சுவர்க்கபோகமாக இருந்தது. தன்னை மறந்து, அந்த இன்பத்தில் ஆழ்ந்து, அதில் இரண்டறக் கலக்கவும் செய்தது அந்த அணில் குஞ்சு.



# ஈழத்துத் தமிழ்ச் சிறுகதைகள்

நவீன இலக்கிய வடிவங்களில் சிறுகதைத்துறை இன்று முதன்மையான உரைநடை வகையாகவுள்ளது. ஈழத்துத் தமிழ்ச் சிறுகதைத் துறை தமிழ்நாடு போன்று வளர்ச்சி கண்டுள்ளது. அத்தோடு சர்வதேசத் தரத்தினதான உள்ளடக்க விரிவையும் கொண்டுள்ளது. ஈழத்துத் தமிழ் எழுத்தாளர்களது கடந்த தசாப்த வாழ்க்கை அனுபவம், அவர்கள் வாழ்கின்ற களம், அவர்களது துயர அனுபவங்கள், சந்திக்கின்ற மானிடத்தின் அக, புறக் காயங்கள் என்பன அவர்கள் எழுதுகின்ற சிறு கதைகளில் நிறைய இடம்பெற்று வருவதால், ஈழத்து தமிழ்ச் சிறுகதைகள் சித்திரிக்கின்ற களமும் கருவும் சர்வதேச தரத்தினுக்கு நிகராகி வருகிறது.

ஈழத்துத் தமிழ்ச் சிறுகதைத் துறையை ஆரம்பித்து வைத்தவர்கள் மூவராவர். ஈழத்துச் சிறுகதைத் துறையின் மூலவர்களாகவும், மும்மூர்த்திகளாகவும் இலங்கையர்கோன், சி. வைத்திலிங்கம், சம்பந்தன் ஆகிய மூவரும் கணிக்கப்படுகின்றனர். கச்சிதமான சிறுகதை உருவம், சிந்தனைச் செழுமை, காவியநயம் ததும்பும் வளமான உரைநடை, அனுபவ வேகம், உணர்ச்சி வெளியீட்டுத் திறமை என்பன அம்மூவரின் சிறுகதைகளை மணிக்கொடிக் குழுவினரான புதுமைப்பித்தன், கு. ப. ராஜகோபாலன், மௌனி, பிச்சமூர்த்தி ஆகியோரின் சிறுகதைத் தரத்திற்கு உயர்ந்தன.

## இலங்கையர்கோன்

இலங்கையர்கோனின் இயற்பெயர் சிவஞானசுந்தரம் என்பதாகும். இவரது முதலாவது சிறுகதையான 'மரியா

மதலேனா' கலைமகள் சஞ்சிகையில் வெளிவந்தது: அப்போது அவரின் வயது பதினெட்டு. கலைமகளில் எழுத ஆரம்பித்த இலங்கையர்கோன் பின்னர் சூறாவளி, கிராம ஊழியன், கலாமோகினி, பாரததேவி முதலிய தமிழகப் பத்திரிகைகளில் சிறுகதைகள் எழுதியுள்ளார். இலங்கையர் கோன் 1938 ம் ஆண்டிலேயே எழுத ஆரம்பித்துவிட்டா லும் 1938 — 1948-ம் ஆண்டுக்குமிடையில் பதினைந்து சிறுகதைகளே எழுதியுள்ளார். இதன் பின்னர் 1950-ம் ஆண்டின்பின் ஐந்து சிறுகதைகள் வரையில் தான் எழுதி யிருப்பார். இலங்கையர்கோனின் சிறுகதைகள் எல்லாம் முப்பதுக்குள் இருக்கலாம் எனத் தெரிகிறது. ஆயினும் குறுகிய எண்ணிக்கையிலுள்ளேயே ஈழத்துச் சிறுகதையுல கில் தனக்கென ஒரு சரியான இடத்தைப் பிடித்துக்கொண் டார். இவரது பதினைந்து சிறுகதைகள் 'வெள்ளிப் பாத ரசம்' என்ற தொகுதியாக வெளிவந்துள்ளன.

இலங்கையர்கோன் இருவகைப்பட்ட சிறுகதைகளை எழுதியுள்ளார் எனலாம். புராண, இதிகாசங்களில் வரும் உன்னத சம்பவங்களையும். வரலாற்றுச் சம்பவங்களையும் கொண்டு எழுதியுள்ளவற்றை ஒன்றாகவும், சமூகக் கதை களை இன்னொன்றாகவும் கருதலாம்.

கடற்கோட்டை, அனுலா, சிகிரியா, மணப்பரிசு, யாழ்பாடி முதலிய வரலாற்றுக் கதைகளைக் கலைமக ளிலும், மேனகை என்ற புராண வரலாற்றுக் கதையை மறுமலர்ச்சியிலும் எழுதியுள்ளார். இலங்கையர்கோனின் சமூகக் கதைகளாக வெள்ளிப் பாதரசம், துறவியின் துறவு, ஒருநாள், தாய், ஓரிரவு, சக்கரவாகம், சதிர்க்காரி, என் தமக்கை, கடற்கரைக் கிழிஞ்சல், முதற் சம்பளம், வஞ்சம், பாரதத்தாய், நாடோடி, அனாதை, தாழைமர நிழலில், தந்தி வந்தது, மச்சாள், மனிதக் குரங்கு ஆகிய கதைகள் விளங்குகின்றன. இவரது சமூகக் கதைகள் விதந் துரைக்கத்தக்க இலக்கியப் படைப்புக்களாகும். இச்சமூகக் கதைகளில் ஈழத்துப் பாத்திரங்கள், அவர்களது தொழில், பண்பாடு, மொழி என்பன சித்திரிப்பிற்குள்ளாகின்றன.

இலங்கையர்கோன் ஒரு நாடக ஆசிரியராகவும் விளங்கி னார் என்பது குறிப்பிடத்தக்கது.

## சி. வைத்திலிங்கம்

ஈழத்தின் தமிழ்ச் சிறுகதைப் பிதாமகர்களில் ஒருவ ராகக் கணிக்கப்படும் சி. வைத்திலிங்கம் 1939 கால கட் டத்தில் சிறுகதைத் துறையில் காலடி பதித்தார். அவரது சிறுகதைகள் இலங்கைவாழ் மக்களின் பின்னணியில் எழு தப்பட்டுள்ளன. இவரின் படைப்புகள் முதலில் ஈழகேசரிப் பத்திரிகையில் வெளிவந்தன. இவர் ஏறத்தாழ இருபத் தைந்து சிறுகதைகளையே படைத்துள்ளார். பாற்கஞ்சி, (ஆனந்த விகடன்), மூன்றாம் பிறை (அல்லையன்ஸ் கதைக் கோவை), தியாகம், களனி கங்கைக் கரையில், பார்வதி, ஏன் சிரித்தார், அழியாப் பொருள், பைத்தியக்காரி, புல்லு மலையில், நந்தகுமாரன், பூதத்தம்பிக் கோட்டை, நெடு வழி, விதவையின் இருதயம், இப்படிப் பல நாள், மின்னி மறைந்த வாழ்வு (கலைமகள்), கங்கா கீதம் (கிராம ஊழியன்) பொன்னி, டிங்கிரி மெனிக்கா, பிச்சைக் காரன், உள்ளப்பெருக்கு, என் காதலி (ஈழகேசரி) முத லான சிறுகதைகளை அவர் தனது எழுத்துலக வாழ்வில் எழுதியுள்ளார்.

இலங்கையர்கோனைப் போலவே சி. வைத்திலிங்கமும் வரலாற்றுக் கதைகள் சிலவற்றை எழுதியுள்ளார். நந்த குமாரன், தியாகம், பூதத்தம்பிக் கோட்டை என்பன வரலாற்றுச் சிறு கதைகளாகும். ஏனையவை சமூகக்கதை களாகும். இவரது சமூகச் சிறுகதைகளில் ஆண், பெண் உறவு கலையழகோடு சித்திரிக்கப்பட்டுள்ளது. கு.ப ராஜ கோபாலனின் செல்வாக்கு இவரது சிறுகதைகளில் விரவிக் காணப்படும். பொதுவாக ஈழத்து எழுத்தாளர் படைப்பு களில் அந்த நாட்களில் பேச்சுத் தமிழ் அதிகமாக இடம் பெறவில்லை. அந்த வகையில் கி. வா. ஜகந்நாதன் ஆசிரியராயிருந்து நடத்திய கலைமகளில் வைத்திலிங்கத்தின் இனிய எளிய நடையிலமைந்த கதைகள் நல்ல வரவேற்

பைப் பெற்றன. வைத்திலிங்கம் தனது ஆதர்ச எழுத்தாளர் கு. ப. ரா. என்று சொல்லிக்கொள்வார். அந்தக் கூற்றின் உண்மையை அவரது கதைகளில் காணப்படும் பாத்திர வார்ப்புகளில் காணலாம்.

## சம்பந்தன்

ஈழம் நவீன இலக்கியத்தில் பெருமையுடன் தலை நிமிர்ந்து நிற்பதற்குச் சிறுகதைத்துறை காரணமாயின் அப்பெருமைக்கு வித்திட்ட பெரும்பணி சம்பந்தனுடையது.

சம்பந்தன் தனது இருபத்தைந்தாவது வயதில் (1939) எழுத்துலகில் பிரவேசித்தார். 1939-ம் ஆண்டு அவர் எழுதிய தாராபாய் என்ற சிறுகதை கலைமகளில் வெளியாகியது. இன்றுவரை அவர் எழுதிய இருபது வரையிலான சிறுகதைகள் கலைமகள், கிராம ஊழியன், ஈழகேசரி, மறுமலர்ச்சி ஆகிய பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. தாராபாய், விதி, புத்தரின் கண்கள், கூண்டுக்கிளி, தூமகேது, மகாலட்சுமி, மனித வாழ்க்கை, சபலம், மனிதன் சலனம், மதம், துறவு ஆகிய கதைகள் கலைமகளிலும், அவன், இரண்டு ஊர்வலங்கள் ஆகியன மறுமலர்ச்சியிலும், கலாஷேத்திரம் ஈழகேசரியிலும் வெளியாகியுள்ளன. தேர்ந்தெடுத்த சொற்களை வைத்துக்கொண்டு ஓரிரண்டு பாத்திரங்களையே நடமாடச்செய்து அற்புதமான சிறுகதைகளைப் படைக்கும் கலை அவரிடம் இலாவகமாக அமைந்துள்ளது. 'சாகுந்தல காவியம்' என்ற காவியத்தையும் சம்பந்தன் ஆக்கியுள்ளார்.

ஈழத்துச் சிறுகதையின் ஆரம்பத் தோற்றம் இம் மும்மூர்த்திகளிட்ட நல்ல அத்திவாரத்தின் மீது எழுந்தது. சிறுகதையின் உருவம், உள்ளடக்கம் என்ற வகையில் தீர்க்கமான ஒருநெறியை இவர்கள் அமைத்துத் தந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து ஈழகேசரி மூலமும் மறுமலர்ச்சி மூலமும் பல சிறுகதையாசிரியர்கள் நல்ல பல சிறுகதைகளைப் படைத்துள்ளனர். அ. செ. முருகானந்தம், கனக செந்தி

நாதன், சு. வரதர், இராசநாயகன், வ. அ. இராசரத்தினம், சொக்கன் என்போர் இவ் வகையில் குறிப்பிடத்தக்கவர்கள். அ. செ. முருகானந்தனின் வண்டிச் சவாரியும் கனக செந்திநாதனின் செம்மண்ணும் ஈழத்துக் கிராமத்துச் சூழலை நன்கு சித்திரிக்கும் சிறுகதைகளாம். வரதரின் கற்பு, சு. இராசநாயகனின் அவன், வ. அ. இராசரத்தினத்தின் தோணி, சொக்கனின் கடல் என்பன ஈழத்துத் தமிழ்ச் சிறுகதைக்குப் பெருமை சேர்ப்பனவாம்.

இவர்களைத் தொடர்ந்து எஸ். பொன்னுத்துரை, செ. கணேசலிங்கன், கே. டானியல், டொமினிக் ஜீவா, என். கே. ரகுநாதன், அகஸ்தியர், காவலூர் இராசதுரை, சு. வே., சிற்பி, இ. நாகராசன், நாவேந்தன், நவம், அருள் செல்வநாயகம், மு. தளையசிங்கம், தாழையடி சபாரத்தினம், சோமகாந்தன், நந்தி, குறமகள், என். எஸ். எம். இராமையா, தெளிவத்தை யோசெப், பித்தன் அன்புமணி, அ. ஸ. அப்துல்ஸமது, பவானி, கே. வி. நடராஜன் முதலானோர் சிறப்பான சிறுகதைகளைப் படைத்துள்ளனர்.

அறுபதுக்குப் பின்னர் ஈழத்துச் சிறுகதைத் துறையில் இலங்கைப் பல்கலைக் கழகம் கொண்ட பங்கு மறக்க முடியாதது. புதிய ஆக்கவிலக்கிய கர்த்தாக்களாக செங்கை ஆழியான், செம்பியன் செல்வன், செ. யோகநாதன், செ. கதிர்காமநாதன், துருவன், குந்தவை, அங்கையன் ஆகியோர் தம்மை நிலைநிறுத்திக் கொண்டனர்.

இவர்களைத் தொடர்ந்து பலர் சிறுகதைகளைப் படைத்து சிறுகதைத் துறைக்குப் பங்காற்றி வருகின்றனர். அவர்களில் தெணியான், சாரல்நாடன், க. சட்டநாதன், முனியப்பதாசன், கோகிலா மகேந்திரன், டானியல் அன்ரனி, நெல்லை க. பேரன், தாமரைச்செல்வி, கே. ஆர் ,

டேவிட், யோசெப்பாலா, சாரல் நாடன், மாத்தளைச் சோமு, க. சதாசிவம், திக்குவெலை கமால், லெ. முருக பூபதி, காவலூர் ஜெகநாதன், சுதாராஜ், மு. கனகராசன், சிதம்பர திருச்செந்திநாதன் முதலானோர் குறிப்பிடத் தக்க சிறுகதை எழுத்தாளர்களாவர்.

ஈழத்துத் தமிழ்ச் சிறுகதைகளின் உள்ளடக்கம், தனித் துவமானது என்பது குறிப்பிடத்தக்க அம்சமாகும். வஞ் சிக்கப்பட்ட மக்களது அவலங்கள், அடக்கி ஒடுக்கப்பட்ட மக்களது துயரங்கள், பேரினவாத அடக்குமுறைக்கெதிரான உணர்வுகள், கிராமிய சமூகநிலை, சமகால யுத்தநிலைமை கள் எனப் பல்திறப்பட்ட கருப்பொருள்கள் சிறுகதைகளில் சித்திரிக்கப்படுகின்றன. வறுமை, சாதியம், பெண்ணியம், தமிழ்த்தேசியம், சூழலியம் என ஈழத்துத் தமிழ்ச் சிறுகதை களின் களப்பரப்பு விரிவடைந்து வருகின்றது.

ஆதாரம்: (செம்பியன் செல்வன் (ஈழத்துச் சிறுகதை மணிகள்), கனக செந்திநாதன் (ஈழத்து இலக்கிய வரலாறு), சு. வே. (ஈழத்தில் சிறுகதை இலக்கியம்), செங்கை ஆழியான் (மல்லிகை முகங்கள்), சோ. சிவபாதசுந்தரம் (கங்கா கீதம்).



# வெள்ளிப் பாதசரம்

''இலங்கையர்கோன்''

தன் வீட்டுக்கு ஒரு அடுக்குப் பெட்டியும் தனக்கு ஒரு தையற் பெட்டியும் வாங்க வேண்டும் என்று நினைத்து வந்தவளுடைய உள்ளம் விம்மும்படி கோவில் வீதியெல்லாம் பெட்டிகளும், கடகங்களும் மலைமலையாகக் குவிந்திருந்தன. குஞ்சுப்பெட்டி, அடுக்குப்பெட்டி, தையற் பெட்டி, மூடற்பெட்டி, பின்னற்பெட்டி......ஊ! எத்தனை வகை! அருகில் மாட்டை அவிழ்த்து அதன் வாயில் பொங்கிய நுரையை வழித்து அதன் மினுமினுக்கும் கரிய முதுகில் தேய்ப்பதில் கண்ணும் கருத்துமாய் நின்ற தன் கணவனின் கையில் மெதுவாக, நுள்ளி ''மாடு தன்பாட்டுக்கு நிற்கட்டும் வாருங்கோ'' என்று கெஞ்சினாள்.

அஸ்தமிக்கும் சூரியனின் கடைசிக் கிரணங்கள் பனை மரங்களின் தலைகளை இன்னுந் தடவிக்கொண்டிருந்தன: கிழக்கு அடிவானத்தில் சந்திரன் வெளுக்க ஆரம்பித்தான்.

அன்று வல்லிபுரக் கோவில் கடைசித் திருவிழா, ''எவ்வளவு சனம் பாத்திகளே! இதுக்காலை எப்பிடிப் போறது'' என்று சொல்லிக்கொண்டே நல்லம்மா தன் கணவனின் அருகில் ஒதுங்கினாள். செல்லையா தன் தோளில் கிடந்த சால்வையை எடுத்து இடுப்பில் வரிந்து கட்டிக்கொண்டு, ''பயப்படாமல் என்னோடை வா'' என்று தன் மனைவியின் கையைப் பற்றினான்.

கோயில் வீதிகளிலும், கடைகளிலும் காணப்பட்டதெல்லாம் நல்லம்மாவின் மனத்தில் ஒரு குதூகலத்தை உண்டாக்கின; வாய் ஓயாது தன் கணவனுக்கு ஏதோ சொல்லிக்கொண்டே சென்றாள். ஐந்து வயதுச் சிறுமியைப்போல, முழங்கால்கள் தெரியும்படி தன் ஆடையைத்

தூக்கிப் பிடித்துக்கொண்டு வீதியைச் சுற்றி ஒரு 'கெந்தல்' போட வேண்டும் போல் அவளுக்குத் தோன்றியது. செல்லையா மௌனமாகத் தன் மனைவியின் குதூகலத்தில் மெய்மறந்து அவள் இழுத்த வழியெல்லாம் போய்க் கொண்டிருந்தான்.

யாழ்ப்பாணத்தின் நீர்வளமற்ற சொற்ப நிலத்தைத் தம் தளராத முயற்சி ஒன்றினாலேயே வளம்படுத்திச் சீவியம் நடத்தும் புதல்வர்களில் அவனும் ஒருவன். இரக்கமற்ற பூமியுடன் தினசரி நடத்தும் போரினால் அவனுடைய தசை நார்கள் முறுக்கடைந்து வச்சிரம் போல இருந்தன. மன ஒருமைப்பாட்டினால் வாய் மௌனமாகவே இருந்தது.

மூன்று மாதங்களுக்கு முன்பு தான் அவன் தன் வாழ்க்கைத் துணைவியைத் தேடிக்கொண்டான். அவளுடைய கலகலத்த வாயும் விடையில்லா ஒரு கேள்வியைக் கேட்பதுபோல அவனுடைய பார்வையை முறித்து நோக்கும் அவளுடைய விழிகளும், மார்பின் பாரம் தாங்கமாட்டாததுபோல் ஒசியும் நூலிடையும் நிர்மலமாக இருந்த அவளுடைய தனிமை வாழ்வில் ஒரு கிளர்ச்சியை உண்டாக்கின. சதா மண்ணைக் கிண்டுபவனுக்கு மண்ணிற்குள் எத்தனையோ ரகஸ்யங்களும், மணங்களும், புதுமைகளும் மறைந்திருக்கும். ஆனால் அவைகளைவிட மேலான ரகஸ்யங்களும், மணங்களும், புதுமைகளும் வாழ்க்கையில் எத்தனை மறைந்து கிடக்கின்றன. ஓ! வாழ்வு எவ்வளவு அற்புதமானது! செல்லையா இன்று அணிந்திருக்கும் நாற்பது ரூபா பெறுமதியுள்ள மாறுகரைச் சால்வையை விட இதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

கோயிலிலுள்ள சனங்கள் தங்கள் இஷ்டப்படி கூக்குரலிட்டுக்கொண்டிருந்தனர். மூலைகளில் கிடத்தப்பட்டிருந்த கைக் குழந்தைகள் அழுதன. பஞ்சகச்சம் அணிந்த பூசகர்கள் அங்குமிங்கும் ஓடினர். இந்த ஆரவாரங்களுக்கிடையில் கர்ப்பக்கிருகத்தில் மணிச் சத்தம் கேட்டது. கூப்பிய

கைகள் தலைக்குமேல் உயர்ந்தன. செல்லையா ஒரு தூணருகே கைகளைக் கட்டியபடி சனங்களின் தலைகளைப் பார்த்துக்கொண்டு நின்றான். நல்லம்மா அவனருகில் கை கூப்பியபடி மூலஸ்தானத்தை ஒரு தரம் பார்ப்பதற்காக அங்கும் இங்கும் தலையை அசைத்தாள். எங்கோ தொலைவில் இருளில் சில தீபங்கள் மின்னின அவைகளின் அருகில் ஒரு தொந்தி பெருத்த பூசகரின் கரும்பட உருவம் கைகளை அசைத்துக்கொண்டு நிற்பது தெரிந்தது. அதற்குப் பின்னால் – அதுதானோ வல்லிபுரப் பெருமாள்?

திருமாலின் திருமண் பிரசாதத்தைப் பெறுவதற்கு ஆரவாரப்பட்ட சனங்கள் ஒரு பக்கத்தில் மேளச்சமா ஆரம்பமாகவே அவ்விடம் நோக்கி நகர்ந்தனர்.

செல்லையாவும் நல்லம்மாவும் கோயிலை வலம் வந்து வணங்கினர்.

தவிற்காரன் தாளவரிசைகளை மெய்மறந்து பொழிந்து கொண்டிருந்தான். அவனுடைய குடுமி அவிழ்ந்த தலையோடு வேறும் ஆயிரம் தலைகள் அசைந்தன. நல்லம்மாவுக்குச் சிரிப்பாகவிருந்தது. தன் கணவனின் உடலோடு தன் உடலை உராய்ந்து கொண்டு ''எல்லோருக்கும் பைத்தியம் பாருங்கோ'' என்றாள். மௌனியாக செல்லையா மௌனம் கலைந்து ''போதும் இனி, வானை வெளியாலை போவம்'' என்றான்.

வெளிவீதிகளிலும் தெருக்களிலும் சனசமுத்திரம் அலைமோதிப் புரண்டது. முத்தையும், வைரத்தையும் பொடியாக்கிச் சிதறிவிட்டது போன்ற அந்த அகன்ற வெண் பரப்பிலே கன்னித்தாயின் உள்ளத்திலே அன்பு வெள்ளம் பாய்வது போல நிலவு வெள்ளத்தை அள்ளிப் பெருக்கும் முழுச் சந்திரனின் கீழ் இரண்டொரு இரவுகளுக்கு வாழ்க்கைப் போரினால் ஏற்பட்ட அலுப்பைக் கொஞ்சம் தீர்த்துக்கொள்வதற்காக யாழ்ப்பாணத்தின் ஒவ்வொரு மூலையிலிருந்தும் வந்து மனிதர்கள் நிரம்பியிருந்தனர்.

சர்பத் கடைக்காரன் பல வர்ணங்கள் கொண்ட போத்தல்களை ஒரு தடியால் அடித்து ஜலதரங்கம் வாசித்தான். மினுக்கு மினுக்கு என்று எரியும் ஒரு கைவிளக்கின் அருகில் உட்கார்ந்து, பொலிஸ்காரனின் காக்கி உடுப்பு எங்காவது தெரிகிறதா என்று கடைக்கண்ணால் பார்த்தபடி 'ஒண்டுக்கு நாலு' க்காரம். "ஓடிவா ஓடிவா — போனால் கடலைக்காசு, வந்தால் தேத்தண்ணிக்காசு" என்று ஓலமிட்டான்.

நல்லம்மாவும் செல்லையாவும் தம்மை அறியாமலே ஒரு வளையற் கடையின் முன்னால் போய் நின்றனர். விளக்கொளியில் சுடர்விடும் கண்ணாடி வளையல்களின் லாவண்யத்தில் நல்லம்மாவின் மனம் லயித்தது. செல்லையா அவளுக்கு ஐந்து ஜதை வளையல்கள் வாங்கிக் கொடுத்தான். ஒரு கண்ணாடிப் பெட்டியில் அழகாக வளைத்து வைக்கப்பட்டிருந்த புதுமாதிரியான ஒரு பாதசரம் செல்லையாவின் கண்களை ஈர்ந்தது. நெருக்கமாகப் பின்னப்பட்ட வெள்ளி வளையம் ஒவ்வொன்றிலிருந்து ஒவ்வொரு வெள்ளிக் குண்டும் வேல் போன்ற ஒரு தகடும் தொங்கிக்கொண்டிருந்தன. முகப்பில் சிங்க முகம் அது போன்ற ஒரு பாதசரம் அவன்முன் ஒருபோதும் பார்த்ததில்லை..... அவன் தன் மனைவியின் முகத்தைப் பார்த்தான்.

குவளை மலரைப் பழித்த அவளது விழிகள் கால் லைட் ஒளியில் அகல விரிந்து பளபளத்தன.

அவளிடம் சாதாரணமான காற்சங்கிலிகூட இல்லை. உருண்டையாகவும் வழுவழுப்பாகவும் இருந்த அவளுடைய கணைக் கால்களில் இதுபோன்ற ஒரு பாதசரத்தை அணிந்து பார்க்க வேண்டும் என்ற ஆசை செல்லையாவின் மனத்தில் தோன்றியது. இந்த ஆசையோடு வேறு எத்தனையோ ரகஸ்யமான இன்ப நினைவுகள் அவன் உள்ளத்தை மயக்கின...... அதை எப்படியும் வாங்கிவிட வேண்டும்! அதன் விலை என்னவென்று கடைக்காரனைக் கேட்டான்.

''முப்பத்தைந்து ரூபாய்: வேறு விலை கேட்க வேண்டாம்.'' செல்லையாவின் மடியில் முப்பத்தொரு ரூபாய் தான் இருந்தது.

''இருபத்தைந்து தரலாம். சாமானைக் குடுத்துப் போடு.''

''தம்பி! இது நாட்டுப் பெண்கள் போடுகிற கால்ச் சங்கிலிகள் அல்ல ராசாத்தியின் கால்களுக்கேற்றது. இந்தியாவிலிருந்து ஸ்பெசலாய் வந்தது. உமக்கு இது சரிவராது ராசா. கடைசி விலை முப்பது ரூபாய், குடுப்பீரா?

''சரி இந்தா...''

பாதசரங்கள் கைமாறி, அவ்விடத்திலேயே நல்லம்மாவின் பாதங்களில் ஏறின.

வெண் மணலில் கால்கள் புதைய இருவரும் மறுபடி கடைகளைச் சுற்றி வந்தனர். மிச்சமாக இருந்த ஒரு ரூபாவைக் கொண்டு ஒரு தையற் பெட்டியும் வாங்கி, ஆளுக்கொரு சர்பத்தும் குடித்தனர், அடுக்குப் பெட்டி வாங்கவில்லை.

நல்லம்மாவின் கால்கள் ஓய்ந்து போயின. ''இனி வண்டிலடியில் போய்க் கொஞ்ச நேரம் இருந்திட்டு, திருவிழாப் பார்த்துக்கொண்டு விடியப் போவம்'' என்று இருவரும் முடிவு செய்தனர். செல்லையா அவளை ஒரு சனக்கும்பலுக்கூடாகக் கையில் பிடித்து நடத்திக்கொண்டு சென்றான். கும்பல் கழிந்து கொஞ்சம் வெளியான இடத்திற்கு வந்ததும் நல்லம்மா திடீரென நின்று தன் இடக் காலை உயர்த்திக் கையால் தடவிப் பார்த்தாள்.

''ஐயோ! காற் சங்கிலியைக் காணேல்ல''

''என்ன? வடிவாய்ப் பார்!''

''ஒரு காலான் எங்கையோ மணலுக்குள்ளை கழண்டு விழுந்திட்டுது.''

''கொஞ்சம் கவனமாய் வாறதுக்கென்ன? உனக்கு ஆட்டம் மெத்திப் போச்சு, ஊதாரிநாய்!''

மறுகணம் செல்லையா தன் நாக்கைக் கடித்துக் கொண்டான்.

குண்டூசியால் துளைக்கப்பட்ட றப்பர் பலூனைப் போல நல்லம்மாவின் உற்சாகம் அப்படியே சப்பளிந்துப் போய்விட்டது. மூன்று மாத மண வாழ்க்கையில் இது தான் முதல் தடவையாக இப்படி ஏச்சுக் கேட்க வேண்டி வந்தது. அதுவும் அம்பலத்தில் கூட்டிக்கொண்டு வந்து விட்டு.....! அவள் மனத்தில் கோபம், அவமானம், துயரம் ஆகிய எல்லா உணர்ச்சிகளும் ஒருங்கே தோன்றின. கண்களில் நீர் மல்கியது.

''போதும் உங்களோடை கோவிலுக்கு வந்த வண்டவாளம். இனி நடையைக் கட்டுவம்.''

செல்லையா ஒருபடி கீழே இறங்கினான். ''நல்லம்மா ஆத்திரத்திலை சொல்லிப் போட்டன். இஞ்சைபார்.....''

''வேண்டாம், இப்பவே போகவேணும். வண்டிலைக் கட்டுங்கோ. நீங்கள் வராட்டி நான் தனியாகக் கால் நடையாய்ப் போறன். வழியிலை காறுக்குள்ளை வசுவுக்குள்ளை ஆப்பிட்டு நெரிஞ்சு போறன்.''

செல்லையா மறுவார்த்தை பேசாமல் தன் திருக்கல் வண்டிலை இழுத்து, மாட்டை அவிழ்த்தும் பூட்டினான். அவன் ஆண் மகன்.

மாட்டின் கழுத்தில் கட்டியிருந்த வெண்டயங்களின் தாளத்திற்கு ஏற்பக் கரடுமுரடான தெருவில் வண்டிச் சக்கரங்கள் 'கடக், கடக்' என்று சப்தம் செய்தன. யாரோ மணமகன் ஊர்வலம் வருவதற்காக விரித்துவிட்ட நில பாவாடை போல் வளர்ந்து கிடந்த தெருவின் இரு மருங்கிலும் நெடிய பனைமரங்கள் மௌனப் பூதங்கள் போல் வரிசையாக நின்று ஆலவட்டம் பிடித்தன.

செல்லையா நாணயக் கயிற்றை இளக்கிவிட்டு மாட்டின் கால்களுக்கிடையில் தன் காலை வைத்தான். ரோசம் மிகுந்த அந்த இளம் காளை உன்மத்தம் கொண்டது போல் ஏற்காலைத் தன் ஏரியில் பட்டும் படாமலும் தாங்கிக்கொண்டு பறந்தது...... ஆத்திரத்தில் சிந்தனையில்லாமல் கூறிய வார்த்தைக்கு இவ்வளவு கோபமா? நிலத்தில் வியர்வை சொட்ட, கை கால் வலியினால் செயலற்றுப் போக, புகையிலைத் தோட்டத்தைக் கிண்டிப் பாடுபட்டவனுக்குத்தான் காசின் அருமை தெரியும்! அவன் ஆண் பிள்ளை, இரண்டு வார்த்தை பேச உரிமையுண்டு, அதைப் பெண் பொறுத்துக் கொண்டால் என்ன......? கொண்டு வந்த காசெல்லாம் அவளுக்காகத்தானே செலவு செய்தான்......? தனக்கு ஒரு சுருட்டுக்கூட வாங்கிக்கொள்ளவில்லையே?

கால்களை வண்டியின் பின்புறம் தொங்கப் போட்டுக் கொண்டு, வண்டியின் கீழ் ஓடும் தெருவைப் பார்த்தபடி நல்லம்மா சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். எவ்வளவு அற்ப காரியம்!

ஒரு கஷ்டமும் இல்லாமல் திருவிழாப் பார்த்துவிட்டுச் சந்தோஷமாக வந்திருக்கலாமே ... எல்லாம் அவளுடைய பிழைதான். கணவன் இரண்டு வார்த்தைகள் கடுமையாகச் சொல்லிவிட்டால்தான் என்ன?

மாடு களைப்பினால் பலமாக மூச்சுவாங்கியது. நெல்லியடிச் சந்தியில், ஒரு பூவரச மரத்தின் கீழ்ச் செல்லையா வண்டியை நிற்பாட்டினான். அந்த நடுயாமத்திலும் கோவிலுக்குப் போகிறவர்களுக்காகக் கடைகள் எல்லாம் திறந்து வைக்கப்பட்டிருந்தன. சந்தையில் இரண்டு பெண்கள் அப்பம் சுட்டுக் கொண்டிருந்தனர். தேநீர்க் கடைகளில் தேநீர் கலக்கும் 'கட கட' என்ற சத்தத்தை விட, மற்றெங்கும் ஆழ்ந்த நிசப்தம் குடிகொண்டிருந்தது.

செல்லையா மாட்டின் களைதீர அதைத் தடவிக் கொடுத்த பின், ஒரு தேநீர்க் கடை இருந்த பக்கமாகச்

சென்றான். அவனுடைய மடியில் ஒரு ஐந்து சதம்தான் இருந்ததென்பது நல்லம்மாவுக்குத் தெரியும். அன்று மத்தியானம் வீட்டில் சாப்பிட்டதுதான். அதன் பிறகு ஒன்றுமே இல்லை..... ''ஐயோ! அவருக்கு எவ்வளவு பசியாயிருக்கும் வாய் திறந்து ஒன்றும் சொல்லாமல் இருக்கிறாரே......'' என்று அவள் அங்கலாய்த்தாள். அவளுடைய இதயம், இளகிக் கரைந்தது. தன் கணவனுடைய மனத்தின் பண்பும் அவன் தன்பால் வைத்துள்ள அன்பின் ஆழமும் அவள் மனத்தில் தெளிவாயிற்று. விவாகம் செய்துகொண்ட புதிதில் ஒரு நாள் அவன் கூறிய வசனம் ஒன்றை அவள் ஞாபகப்படுத்திக் கொண்டாள். '' பெட்டை உனக்காக வேணுமெண்டால் என்ரை உசிரையும் கொடுத்து விடுவேன். நீ ஒண்டுக்கும் பயப்பிட வேண்டாம்''

அவளுடைய நெஞ்சுக்குள் ஏதோ ஒன்று உடைவது போல்... கண்கள் பொருமி உவர் நீரைப் பொழிந்தன. தன் கணவனை ஒரு குழந்தை போல் மடியில் வைத்துத் தாலாட்டி அவனுடைய உடலின் ஆயாசத்தையும் மனக் கவலையையும் போக்கவேண்டும் போல் அவளுக்குத் தோன்றியது...

செல்லையா வாயில் ஒரு சுருட்டுடன் வந்து, மனைவியருகில் ஒரு வெற்றிலை பாக்குச் சுருளை வைத்து விட்டு அவளுடைய முகத்தைப் பார்த்தான்... அவளுடைய கண்ணீர் தோய்ந்த முகத்தின் ஒளி அவனை உலுக்கியது. தன்னுடைய நாற்பது ரூபா பெறுமதியுள்ள மாறுகரைச் சால்வையால் அவளுடைய கண்ணீரைத் துடைக்க வேண்டும் என்று அவன் மனம் அவாவியது.

''என்ன, நல்லம்.....''

நல்லம்மாவின் கண்ணீர் வடிந்த முகத்தில், நாணம் கலந்த ஒரு புன்னகை அரும்பியது. ''ஒண்டுமில்லை. உங்களுக்குப் பசி இல்லையே? வெளிக்கிடுங்கோவென் கெதியாய் வீட்டை போவம்.''

செல்லையா அதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டான். மாட்டின் வெண்டயம் மறுபடியும் பனந்தோப்புக்களில் எதிரொலித்தது.

வல்லைவெளி!

இந்த அகன்ற பூமிப்பரப்பின் மகிமையை அறிந்தது போல இதுகாறும் வேகமாய் ஓடி வந்த மாடு, தன் கதியைக் குறைத்து அடிக்குமேல் அடி எடுத்து வைக்க ஆரம்பித்தது.

பேய்க் காற்று 'ஹோ' என்று சுழன்றடித்தது. வானம் கவிந்து, நாற்புறமும் நிலத்தைக் கவ்விக்கொண்டிருந்தது. வெளியின் நடுவே தேங்கி நின்ற நீரோடை, ஓர் அரக்கனது பிரமாண்டமான மார்பில் அணியப்பட்ட மரகதச் சரடுபோல் ஜ்வலித்தது. வான முகட்டின் உச்சியில் தொங்கிக்கொண்டிருந்த பளிங்குத் தகடு போன்ற சந்திர திபம் கீழே விழுந்துவிட எத்தனிப்பது போலக் கனிந்து பிரகாசித்தது.

சின்ன மனிதர்களையும் பெரிய எண்ணங்கள் எண்ணும்படி தூண்டும் இந்த வெளிப் பிரதேசத்தில் தான் மனிதனின் ஜீவநாடி நவநாகரிக முறைகளால் நலிந்துபடாமல் இன்னும் அந்தப் பழைய வேகத்தோடு அடித்துக் கொண்டிருக்கிறது.

எங்கோ வெகு தொலைவில் நிலத்தில் இருந்து இரண்டு அடி உயரத்தில் பொட்டிட்டது போன்ற ஒரு ஒளி தோன்றிக் கொஞ்சம் கொஞ்சமாகத் தெருவை நோக்கி நகர்ந்து வந்தது. செல்லையா அதைக் கண்டதும் அதை நோக்கிக் காறியுமிழ்ந்தான். நல்லம்மா, ''அது என்ன?'' என்று கேட்டாள்.

''ஆரோ மீன்பிடிகாரரர் சூள் கொண்டு போகிறான்கள்'' என்று ஒரு பொய் சொல்லி மழுப்பி விட்டுச் செல்லையா மாட்டின் வாலைப் பிடித்து முறுக்கினான்.

அந்த வெளிச்சம் தெருவைக் கடந்து வேகமாய் மற்றப் பக்கத்தில் போய் 'பக்' கென்று அவிந்தது.

செல்லையாவின் இடக்கை அவன் மனைவியின் இடையை நோக்கி நகர்ந்தது.

அவனுடைய மனம் வல்லைவெளி போல் விரிந்தது. மெய் மறந்த ஒரு மகிழ்ச்சி அவனை ஆட்கொண்டது. தன் குரலை எழுப்பி, "ஞானகுமாரி" என்ற தேவகாந்தாரி ராகப் பாட்டைப் பாடினான்..... அவனுக்குப் பசியில்லை. தாகம் இல்லை. எத்தனை கொள்ளிவாய்ப் பிசாசுகள் சேர்ந்தும் அவனை என்ன செய்துவிட முடியும்?



# பாற்கஞ்சி

## சி. வைத்திலிங்கம்

"ராமு, என் ராசவன்னா குடிச்சிடுவாய், எங்கே நான் கண்ணை மூடிக்கொள்கிறேன். குடிச்சிடு பார்க்கலாம். நாளைக்குப் பாற்கஞ்சி......"

"சும்மாப் போம்மா, நாளைக்கு நாளைக்கென்று எத்தனை நாளா ஏச்சுப்பிட்டாய், என்னதான் சொல்லேன். கூழ் குடிக்க மாட்டேம்மா."

"இன்னும் எத்தனை நாள் பஞ்சமடா? வயலிலே நெல் முத்தி விளைஞ்சு வருது. ஒனக்கு வேணாம்னா பாற் கஞ்சி தாரனே"

"கூழைப் பார்த்தாலே வவுத்தைப் புரட்டுதம்மா, முடியாதுன்னா முடியாது" என்று சொல்லி அழத் தொடங்கினான்.

"அப்பா பசியோட காத்துண்டிருப்பாரடா வயல்லே. கூழ் கொண்டு போகணும். என்ன பாடுபட்டும் நாளைக் குக் கஞ்சி தந்துடுறனே, ஆம்...... என் கண்ணோல் லியா?"

"நிச்சயமாய்ச் சொல்றயாம்மா? நாளைக்குப் பாற் கஞ்சி தருவாயா?......"

சட்டென்று பக்கத்திலிருந்து சிறுவர்கள் தம்பளப்பூச்சி பிடித்து விளையாடும் சப்தம் கேட்டது. அவதி அவதி யாய்ப் பத்து வாய் கூழ் குடித்தான் ராமு. எல்லாவற்றை யும் மறந்து விளையாட ஓடினான்.

அந்தக் கிராமத்தில் முருகேசனுடைய வயல் துண்டு நன்றாய் விளையும் நிலங்களில் ஒன்று; அதற்குப் பக்கத் திலே குளம். குளத்தைச் சுற்றிப் பிரமாண்டமான மருத மரங்கள். தூரத்திலே அம்பிகையின் கோயிற் கோபுரம்.

இவை எல்லாவற்றையும் சுற்றி வேலி போட்டாற் போல தூங்கிக் கிடந்தன குடிமனைகள்.

மார்கழி கழிந்துவிட்டது. இப்பொழுது மேகத்திலே புகார் ஓடுவதில்லை. ஞான அருள் பெற்ற நாள் வெண்ணிறம் பெற்று வந்தது. ஆம். தைமாதம் பிறந்து துரிதமாய் நடந்துகொண்டிருந்தது.

மாரிகாலம் முழுவதும் ஒய்ந்து தூங்கிக்கிடந்த ஜீவராசிகள் பாட்டுடன் வேலை தொடங்கிவிட்டன. முருகேசனும் வயலிலே வேலை செய்துகொண்டிருந்தான். பனியிலே ஒடுங்கிக் கிடந்த நரம்புகளிலே சூரிய ஒளி வெள்ளம் பாயவே, அவன் தேகத்தில் ஒரு சுறுசுறுப்பு உண்டானது. வலிந்து இறுகியிருந்த நரம்புகள் விண் போல் தெறித்தன. எழுந்து நின்று கண்களைச் சுழற்றித் தன் வயலைப் பார்த்தான். நெற்கதிர்கள் பால்வற்றி, பசுமையும், மஞ்சளும் கலந்து செங்காயாக மாறிக்கொண்டிருந்தன. ''இன்னும் பதினைந்து நாட்களில்'' என்று அவனை அறியாமல் அவன் வாய் முணுமுணுத்தது.

முருகேசன் மனத்தில் ஒரு பூரிப்பு, ஓர் ஆறுதல், ஒரு மன அமைதி அவன் ஒரு வருஷமாய்ப் பாடுபட்டது வீண் போகவில்லையல்லவா? ஆனால் இவற்றுக்கிடையில் காரணமில்லாமல் ''சில வேளை ஏதேனும்.... யார் கண்டார்கள்?'' என்ற இன்பமும் துன்பமும் கலந்த ஒரு மன ஏக்கம்......!

முருகேசனுக்கு வயலை விட்டுப் போக மனம் வரவில்லை. பொழுது உச்சிக்கு வந்துவிட்டது. பசி வயிற்றைக் கிள்ளியது. என்றாலும் பயிருக்குள் நுழைந்து ஒவ்வொரு கதிராக தன் கைகளால் அணைத்து தன் குழந்தைகள் போலத் தழுவிக்கொண்டிருந்தான்.

கண்ணை மின்னிக்கொண்டிருந்த அந்த வெயிலிலே காமாட்சி கூழுடன் அப்பொழுதுதான் வந்தாள். கூழ் குடித்துக்கொண்டிருக்கும் பொழுது முருகேசன் அவளைப் பார்த்து, போனவருஷம்தான் மழை இல்லாமல் எல்லாம்

சப்பையும் சாவியுமாய்ப் போயிருந்தது. "ராமு, அதோ பார் இந்த வருஷம் கடவுள் கண் திறந்திருக்கிறார். கருப்பன் செட்டி கடனைத் தீர்த்துப்புடலாம். நமக்கு ஒரு வருடத்துக்குச் சோத்துக்குக் குறைவு வராது. எங்க ராமனுக்கு ஒருசோடி காப்பு வாங்கணும்"

"எனக்கு ஒட்டியாணம்"

"ஏன், ஒரு கூறைச் சேலையும் நன்னாயிருக்குமே"

"ஆமாங்க, எனக்குத்தான் கூறைச்சேலை. அப்படின்னா ஒங்களுக்கு ஒரு சரிகை போட்ட தலப்பா வேணுமே"

"அச்சா திரும்பவும் புதுமாப்பிளை பொம்புளையாட்டம் ரெண்டு பேரும்...... ஒ..... ஒரே சோக்குத்தான்" என்று சொல்லி அவளைப் பார்த்து இளித்தான்.

காமாட்சி வெட்கத்தினால் தன் சீலைத் தலப்பால் முகத்தை அரைகுறையாய் மூடிக்கொண்டு "அதெல்லாம் இருக்கட்டும்........ எப்போ அறுவடை நாள் வைக்கப் போறீங்க" என்றாள்.

"இன்னிக்குச் சனிக்கிழமை, சனியோடு சனி எட்டு. மற்றச் சனி பதினைந்து, ஆம் நல்ல நாள். அதே சனிக்கிழமை வைத்திடுவமே."

"தாயே, இதுக்கிடையில் ஒரு விக்கினமும் வந்திடப் படாது." என்று மனதில் சொல்லிக் கொண்டாள் காமாட்சி.

ஒரு பெருநாளை எதிர்பார்ப்பதுபோல் காமாட்சியும் முருகேசனும் அறுவடை நாளை எதிர்நோக்கி இருந்தார்கள். காமாட்சி தன் வீட்டிலுள்ள களஞ்சிய அறையைக் கோலமிட்டு மெழுகி வைத்திருந்தாள். லக்ஷ்மி உறையப் போகும் அந்த அறைக்கு ஒவ்வொருநாளும் தீபம் ஏற்றி வந்தாள். மணையாகக்கிடந்த அரிவாள்களைக் கொல்லன் பட்டடையிற் கொண்டு போய்த் தேய்த்து வந்தான்

முருகேசன். கதிர்ப் பாய்களை வெய்யிலிலே உலர்த்தி, பொத்தல்களைப் பனை ஓலை போட்டு இழைத்து வைத்தான். ஐந்தாறு நாட்களுக்கு முன்னரே அயல் வீட்டுக் கந்தையனிடமும் கோவிந்தனிடமும் "அறுவடை வந்திட வேணும் அண்ணமாரே" என்று பலமுறை சொல்லி வந்தான். இருவருடைய மனதிலும் ஓர் ஆவல் துடித்து நின்று இவற்றையெல்லாம் செய்து வந்தது.

அறுவடை நாளுக்கு முதல் நாள் அன்று வெள்ளிக் கிழமை பகல் தேய்ந்து மறைய இன்னும் மூன்று நாழிகை தான் இருந்தது. நிஜகளங்கமாய் இருந்த வானத்திலே ஒரு கருமுகிற் கூட்டம் கூடியது. வரவரக் கறுத்து தென் திசை இருண்டு வந்தது. அந்த மேகங்கள் ஒன்று கூடி அவனுக்கு எதிராகச் சதி செய்வதாக முருகேசன் நினைத்தான். அந்தக் கருவானம்போல் அவன் மனதிலும் இருள் குடி கொண்டது. காமாட்சி அவள் மனத்திற்குள் அம்பிகைக்கு நூறு வாளி தண்ணீரில் அபிஷேகஞ் செய்வதாகப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். சிறு நேரத்தில் ஒரு காற்று அடித்தது. கூடியிருந்த முகிற் கூட்டம் கலைந்து சிறிது சிறிதாய் வானம் வெளுத்துக்கொண்டு வரவே முன்போல் ஆகாயம் தெளிவுடன் விளங்கிற்று. தன்னுடைய பிரார்த்தனை அம்பிகைக்குக் கேட்டுவிட்டதென்று காமாட்சி நினைத்தாள்.

முருகேசன் படுக்கப் போகமுன் அன்றைக்குப் பத்தாவது முறை கந்தையனுக்கும், கோவிந்தனுக்கும் காலையில் அறுவடையைப்பற்றி நினைப்பூட்டிவிட்டு வந்து படுத்துக் கொண்டான். அவன் நித்திரைக்குப் போனபொழுது நேரமாகிவிட்டது. அவன் படுக்கையிலே புரண்டு படுத்துக்கொண்டிருந்தான். நித்திரை அவனுக்கு எப்படி வரும்? அவனுடைய மனம் விழிப்பிற்கும், தூக்கத்திற்கும் இடையே ஊசலாடிக்கொண்டிருந்தது. ஆயிரஞ் சிந்தனைகள் பிசாசுகளைப் போல வந்து அவன் மனதிலே ஒடிக் கொண்டிருந்தன.

அவன் வயலிலே நெல் அறுத்துக்கொண்டிருக்கிறான். பக்கத்திலே கோவிந்தனும், கந்தையனும் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். இவர்கள் அறுத்து வைத்ததைக் காமாட்சியும், பொன்னியும், சின்னம்மாவும் கட்டுக்கட்டாய் அடுக்கிக்கொண்டிருக்கிறார்கள். கிளிகளையும், காக்கைகளையும் துரத்திக்கொண்டு திரிகிறான் ராமு. அப்பொழுது காமாட்சி: ''பள்ளத்துப் பள்ளன் எங்கேடி போய்விட்டான்'' என்று பள்ளு பாடத் தொடங்கினாள்.

அதற்குப் பொன்னி ''பள்ளன் பள்ளம் பார்த்துப் பயிர் செய்யப் போயிட்டான்!'' என்று சொல்ல, காமு, ''கொத்துங்கொண்டு கொடுவாளுங்கொண்டு...'' என்று இரண்டாம் அடியைத் தொடங்கினாள்.

அதற்குப் பொன்னி ''கோழி கூவலும், மண்வெட்டி கொண்டு'' என்று சொல்ல, இருவரும் சேர்ந்து ''பள்ளன் பள்ளம் பார்த்துப் பயிர் செய்யப் போயிட்டான்!'' என்று முடித்தார்கள்.

உடனே காமு, ''ஆளுங் கூழை அரிவாளுங் கூழை'' என்று சொன்னதும், முருகேசன் ''யாரடி கூழை!'' என்று அரைத் தூக்கத்திலிருந்து கத்திக்கொண்டு எழுந்திருந்தான்.

முருகேசன் — ஆள் கூழை, பாவம், தன்னையே அவள் கேலி செய்வதாக நினைத்து அப்படிக் கோபித்துக்கொண்டான். இப்பொழுது நித்திரை வெறி முறிந்ததும் தான் செய்ததை நினைக்க அவனுக்கு வெட்கமாயிருந்தது. தனக்குள்ளே சிரித்துக்கொண்டு திரும்பவும் படுத்துக்கொண்டான். அந்தக் கனவுதான் எவ்வளவு அழகான கனவு! அதன் மீதியையும் காண வேண்டும் என்று ஆவலாயிருந்தது. ஆனால் நித்திரை எப்படி வரப்போகிறது? கனவுதான் மீண்டும் காணப்போகிறானா? தன் கற்பனையிலே மீதியை திருஷ்டித்துப் பார்த்து அவன் மகிழ்ந்து கொண்டிருந்தான்.

பாட்டுடன் அறுவடை சென்றுகொண்டிருக்கிறது. வயலிலே நின்று நெல் மூட்டைகளை வண்டியில் போடுகிறான். வண்டி வீட்டு வாசலிலே வந்து நிற்கிறது. அவனுடைய களஞ்சியம் நிறைந்து பரிபூரணமாய் விட்டது. ராமன் வயிறு நிறையப் பாற்கஞ்சி குடித்துக்கொண்டிருக்கிறான். காமு ஒட்டியாணத்துடன் வந்து அவனை......

அப்பொழுது வீட்டுக் கூரைக்கு மேலிருந்து ஒரு சேவல் கூவிற்று. முருகேசனுடைய கற்பனை அறுந்துவிட்டது. அக்கிராமத்திலுள்ள சேவல்கள் தொடர்ந்து ஒவ்வொன்றாகக் கூவிக்கொண்டு வந்தன. அவன் வீட்டுக்கு முன்னால் கட்டியிருந்த ஆட்டுக்குட்டி ''மேய் மேய்'' என்று கத்தத் தொடங்கியது. எங்கிருந்தோ கள்ளத்தனமாய் உள்ளே நுழைந்த மெல்லிய காற்று அவன் மேல்படவே மீண்டும் குளிர்ந்தது. முருகேசன் பரபரவென்று எழுந்திருந்தான். வாசலை அடைந்து வானத்தை அண்ணாந்து பார்த்தான்.

அவன் படுக்கைக்குப் போன பொழுது வானத்திலே பூத்திருந்த நட்சத்திரங்கள் ஒன்றையும் காணவில்லை. வானம் கறுத்துக் கனத்து எதிலோ தொங்கிக்கொண்டிருப்பது போல் தோன்றிற்று. வீட்டு முற்றத்திலே வந்து நின்றான், ஒரு மழைத்துளி அவன் தலைமேல் விழுந்தது. கையை நீட்டினான். இன்னும் ஒரு துளி! மற்றக் கையையும் நீட்டினான். இரு துளிகள் வீழ்ந்தன. அவன் தலையிலே வானமே இடிந்து விழும்போல் இருந்தது.

உக்கிப்போய்த் தன் வீட்டுத் திண்ணையிலே அவன் குந்திக்கொண்டான். பொலுபொலுவென்று மழை தொடங்கியது. இடி இடித்தது மின்னி மழை சோனாவாரியாய்க் கொட்டிக்கொண்டிருந்தது.

காலை ஏழு மணியாகியும் மழை விடவேயில்லை, ராமு ஓடி வந்து தந்தைக்குப் பக்கத்திலே குளிர் காய்ந்து கொண்டிருந்தான். காமாட்சி இடிந்துபோய் நின்றாள்.

மழையுடன் காற்றும் கலந்து ''ஹோ'' வென்று இரைந்து கொண்டிருந்தது.

''அம்மா இன்னைக்குப் பாற்கஞ்சி தாரதாய்ச் சொன்னியே, பொய்யாம்மா சொன்னாய்?'' என்று தாயைப் பார்த்துக் கேட்டான் ராமு.

காமாட்சிக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அவள் வயிறு பற்றி எரிந்தது. பச்சைக் குழந்தையை எத்தனை நாட்களாய் ஏமாற்றிவிட்டாள்? மழையையும் பாராது பக்கத்து வீட்டுக்கு ஓடினாள். காற்படி அரிசி கடனாய் வாங்கிக்கொண்டு வந்தாள்.

முருகேசன் ஒன்றும் பேசாமல் வானத்தைப் பார்த்தபடி இருந்தான். அவனுடைய பார்வை வயல் வெளியை ஊடுருவிச் சென்று எங்கேயோ லயித்துப் போயிருந்தது.

''வெள்ள வாய்க்காலிலே தண்ணீர் கரைபுரண்டோடிக் கொண்டிருக்கிறது. இப்பொழுது குளம் நிறைந்து தண்ணீர் பெருக்கெடுத்துவிடும். என்னுடைய நெற்பயிர்கள் கீழே விழுந்து உருக்குலைந்துவிட்டன. நெற்கதிர்கள் உதிர்ந்து வெள்ளத்துடன் அள்ளுண்டு போய்க்கொண்டிருக்கின்றன'' என்று அவன் எண்ணி ஏங்கினான்.

காமாட்சி களஞ்சிய அறைக்குப் போனாள். அது வெறுமனே கிடந்தது. அதைப் பார்த்ததும் அவளுக்கு அழுகை விம்மிக்கொண்டு வந்தது. அங்கே நிற்கத் தாங்காமல் வெளியே வந்தாள். ராமு ''நாளைக்கும் தாரியாம்மா பாற்கஞ்சி'' என்று கெஞ்சிக் கேட்டான். அவன் கஞ்சி குடித்த கோப்பை அவளுக்கு முன்னே காலியாய்க்கிடந்தது.

அநேக நாள் பழக்கத்தினாலே ''நாளைக்...'' என்று மட்டுமே அவளால் சொல்ல முடிந்தது. அந்த அரைகுறையான வார்த்தை முருகேசன் வயிற்றிலே நெருப்பை அள்ளிக்கொட்டியது.

